ओं.

THE

# Upanishad Artha Deepika

OR

## THE PRINCIPAL UPANISHADS

WITH

*Advaita, Visishtadvaita and Dwaita Bhashyas*

IN TAMIL.

## II.-KENA UPANISHAD.

PUBLISHED BY

A. SIVA ROW,

*Of the Registration Department and Translator of Vicharsagar & Isa Upanishad in Tamil.*

# உபநிஷதர்த்த தீபிகை

என்னும்

மூன்றுமத பாஷ்யங்களுடன் உபநிஷத்துக்களின்

தமிழ் மொழிபெயர்ப்பு.

## II.—கேன உபநிஷத்து.

குத்தாலம் ஸப் ரிஜிஸ்த்ராரும், விசாரசாகரம், ஈசாவாஸ்யம்

இவைகளை தமிழில் மொழிபெயர்த்தவருமாகிய

ஏ. சிவராயரால்

பிரசித்தப்படுத்தப்பட்டது.



*Madras;*

PRINTED BY MESSRS. THOMPSON AND CO., AT THE "MINERVA" PRESS.

1899.



Price. Rs. 1—12—0.

# முகவுரை.

இந்த உபநிஷத்தின் முதல் பதம் கேன மானதால் இந்த உபநிஷத்திற்கு கேனோபநிஷத்து என்று பெயர் கிடைத்தது. இதற்கு தளவகார உபநிஷத்து என்றும் பெயருண்டு. இந்த உபநிஷத்தின் 4-வது அத்தியாயம் 7 - வது மந்திரத்தில் ब्राह्मीउपनिषत् ப்ராஹ்மீம் உபநிஷத் என்கிற பதங்கள் வந்திருந்தாலும் இந்த உபநிஷத்து இப்பெயரை உடையது என்று சொல்லக்கூடாது. ஏனெனின் இப்பெயர் பிரம்ம சம்பந்த மென்பதைக் கூறுகிறதேதவிர வேறு ஒன்றையும் கூறவில்லை.

இந்த உபநிஷத்து சாமவேதத்தின் தளவகார சாகையைச் சேர்ந்தது. இதே பெயருள்ள வேறு ஒரு உபநிஷத்து வெகு ஸ்வல்ப வாசக பேதத்துடன் அதர்வண வேதத்தைச் சேர்ந்த உபநிஷத்துக்களில் ஒன்றாக இருக்கிறது. ஸ்ரீ சங்கராசாரியர் அவர்கள் இரண்டு கேனோபநிஷத்துக்களுக்கும் தனித்தனி பாஷ்யம் செய்திருக்கிறார்கள். ஆநந்தகிரி சுவாமிகள் இரண்டிற்கும் டீகை செய்திருக்கிறார்கள்.

சாமவேதீய கேனோபநிஷத்து ஒரு பிராமணத்தின் 9 - வது அத்தியாயம் என்றும், முந்தின 8-அத்தியாயங்களில் கர்மங்கள், அவைகளுடன் சம்பந்தப்பட்ட பிராண உபாசனை, ஐந்துவித ஏழுவித சாமங்களின் உபாசனை, காயத்திரசாமம், வம்சம், இவைகள் சொல்லப்பட்டிருக்கின்றனவென்றும் ஸ்ரீசங்கராசாரியர்சொல்லுகிறார். சாமவேதத்தைச் சேர்ந்த சாந்தோக்கிய உபநிஷத்தில் II-2-ல் ஐந்து சாமங்களும், II-8 ல் ஏழுவித சாமங்களும், III-12-1 ல் காயத்திர சாமமும் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இன்ன பிராமணத்தை ஸ்ரீ சங்கராசாரியர் மனதில் வைத்துக்கொண்டிருந்தார் என்பது விளங்கவில்லை. ஜைமினிய பிராமணத்தில் ஸ்ரீசங்கராசாரியர் சொல்லிய விஷயங்கள் யாவும் காணப்படுகின்றன. ஆனால் அத்தியாயங்கள்மட்டும் பேதப்படுகின்றன. இந்த உபநிஷத்து சங்கரர் சொல்லியபடி 9-வது அத்தியாய்மாயிராமல், இந்த பிராமணத்தில் 4-வது அத்தியாயத்தில் 10-வது அனுவாகமாகக் காணப்படுகின்றது.

இந்த உபநிஷத்தில் நான்கு அத்தியாயங்கள் அடங்கியிருக்கின்றன. முதல் மந்திரத்திற் கேட்கப்பட்ட கேள்விக்கு முதலிரண்டு அத்தியாயங்களில் உத்தரம் சொல்லப்படுகின்றது. இரண்டாவது அத்தியாயத்தில் உத்தரம் விடுகதை ரூபமா யிருக்கின்றது. மூன்றாவது நான்காவது அத்தியாயங்களில் பிரஸ்தாபவிஷயமாய் ஒரு

கதை சொல்லப் படுகின்றது. இந்தக் கதையில் பிரம்மம் யக்ஷ ரூபத்தைத் தரித்ததாயும், இந்திரனைக் கண்டவுடன் மறைந்ததாயும் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்குக்காரணம் இந்திரனுக்கு கர்வ பங்கமாக வேண்டும் என்பதாய் அத்வைதத்திலும், கர்வ பங்க மாகக் கூடாதென்பதாய் விசிஷ்டாத்வைதத்திலும், இந்திரன் உப தேசத்துக்கு யோக்கியனல்ல னென்பதாய் துவைதத்திலும் சொல் லப்பட்டிருக்கின்றது. இந்திரனுக்குக் காணப்பட்ட உமாதேவி ஸ்திரீரூபத்தை அடைந்த பிரம்மவித்தை, அல்லது, பார்வதி என்று சங்கரரும், சாக்ஷாத் பார்வதியே என்று விசிஷ்டாத்வைதிகளும் துவைதிகளும் சொல்லுகிறார்கள். முதலாவது அத்தியாயத்தில் नेदं यदिदमुपासते நேதம் யதிதமுபாஸதே என்பதனால் துவைதிகள் பிரம்மம் வேறு ஜீவன் வேறு என்றும், அத்வைதிகளும் விசிஷ் டாத்வைதிகளும் பிரம்மம் வேறு, உபாசிக்கப்பட்ட தேவதைகள் வேறு, என்றும் அர்த்தம் செய்கிறார்கள்.

## அத்வைதம்.

இந்த உபநிஷத்துக்கு சங்கரபாஷ்யத்தைத்தவிர சங்கரானந்த ரால்செய்யப்பட்ட தீபிகையும், நாராயணசுவாமிகளால் செய்யப்பட்ட தீபிகையும் ஏற்பட்டிருக்கின்றன. நாராயணசுவாமிகள் சங்கர பாஷ்யத்தை அனுசரித்தும்,அந்தபாஷ்ய வசனங்களையே எடுத்துக் கொண்டும், அந்த பாஷ்யத்திற்குச் சுருக்கமாகவும் தீபிகை எழுதி யிருக்கிறார். சங்கரானந்தர் தனிமையாகவே தீபிகை எழுதியிருக்கி றார். அந்த தீபிகை அத்வைதபரமாயினும் நூதனமான அர்த்தத் தைப் போதிக்கிறது. விஸ்தார பயத்தால் சங்கர பாஷ்யமும் ஆந ந்தகிரி டீகையில் சில பாகங்களுந்தான் இத்தமிழ் மொழிபெயர்ப் பில் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

தளவகார உபநிஷத்தின் முக்கியமான கருத்து பரப்பிரம்மம் கேவலம் சைதன்னிய ஸ்வரூபம் என்பதையும், அது பிரபஞ்சத் தைவிட வேறானது என்பதையும் குறிப்பிடுவதேயாம். இந்தப் பரப் பிரம்மத்துக்கு ஜீவனுடனும், பிரபஞ்சத்துடனும் சம்பந்த மிருக் கிற தென்பதை இந்த உபநிஷத்து கூறுகிறதேதவிர, அந்த சம் பந்தத்தின் விசேஷ விவரங்களைக் கூறவில்லை. எவனுடைய ஆஜ் ஞையால் மனது, பிராணன், இந்திரியங்கள் தங்கள் தங்கள் வியா பாரங்களைச் செய்கின்றன? என்னும் கேள்வியுடன் இந்த உபநி ஷத்து ஆரம்பமாகிறது. இதனால் சகலத்துக்கும் ஆதிகாரணமாயும் தனக்கு யாதொரு காரணமின்றியு மிருக்கிற ஒரு மூலகாரணத்தை

ஒப்புக்கொண்டதாக ஆகிறது. இந்த மூலகாரணமே காதுக்குக் காது என்றும், மனதிற்கு மனதென்றும், வாக்குக்கு வாக்கு என்றும், பிராணனுக்குப் பிராணன் என்றும், கண்ணுக்குக் கண்ணென்றும், அதாவது, எந்த சைதன்னியத்தால் இவைகள் வியவஹரிக்கின்றனவோ அந்த சைதன்னியம் என்றும், இதின் ஞானத்தால் மோக்ஷமடையப் படுகிறதென்றும் குரு உத்தரம் சொல்லுகிறார் இவ்விதமாக பிரம்மத்தின் ஸ்வரூபம் கூறப்பட்டது. வேறுவிதமாய் அதைக் கூறவும் முடியாது. ஏனெனின், முன்னோர்களுடைய அபிப்பிராயப்படி அது அறியப்பட்டதற்கும் வேறு, அறியப்படாததற்கும் வேறு. ஆகையால் அது இன்னது என்று உபதேசிக்கத்தகாதது. இவ்விடத்தில் அறியப்பட்டதென்பது வியக்தப் பிரபஞ்சத்தையும், அறியப்படாத தென்பது இதற்குக்காரணமான அவ்வியக்தத்தையும் குறிப்பிடுகிறது. வியக்தப்பிரபஞ்சம் நம்முடைய இந்திரியங்களுக்கு விஷயம். அவ்வியக்தப் பிரபஞ்சம் மனதிற்குத்தான் விஷயம். பிரம்மம் மனதிற்குக்கூட விஷயமாகாதபடியால் அது அறியப்பட்டதற்கும் அறியப்படாததற்கும் வேறு என்றும் இவைகளுக்குக் காரணமென்றும் ஏற்படுகிறது. இப்படிப்பட்ட பிரம்மத்தை, பதார்த்தத்தை இந்திரியங்களால் வியக்தமாய் அறிவதுபோல நாம் அறிவதாகவும்சொல்லமுடியாது, அறியவில்லை என்றும் சொல்ல முடியாது. பிரம்மத்தை அறிவதாக, அதாவது, அது இப்படிப்பட்டதென்று சொல்லக்கூடியதாக நினைக்கிறவர்கள் அதை வாஸ்தவத்தில் அறிந்தவர்களல்ல. பிர்ம்மம் இப்படிப்பட்டதென்று சொல்லமுடியாது என்று நினைக்கிறவர்கள் அதின் வாஸ்தவத்தை அறிந்தவர்கள். ஆகவே அகண்ட பிரம்மத்தின் ஞானம் சாத்தியமானாலும் கண்ட புத்தியுள்ள மனிதனால் முழுமையும் அடையத்தக்கதல்ல. புத்திக்கு ஏற்பட்ட தோஷம் நீங்கினபிறகு தான் அகண்டஞானம் உண்டாகும். இந்த உபநிஷத்தின் இரண்டாவது அத்தியாயத்தின் முடிவில் பிர்ம்மம் கேவலம் போதஸ்வரூபம் என்றும், இந்த அறிவால்தான் மோக்ஷம் கிடைக்கும் என்றும், இல்லாவிடின் ஜனனமரண ரூபமரணம் சம்பவிக்கு மென்றும் சொல்லி உபநிஷத்து முடிவு பெறுகிறது. பின்வரும் இரண்டு அத்தியாயங்களில் கதைதிருஷ்டாந்தத்தால் பிர்ம்மத்தின் ஸ்வரூபம் அநிர்தேசிக்கப் பட்டிருக்கின்றது. முதலிரண்டு அத்தியாயங்கள் நிர்குண பிரம்ம விஷயமாயும், மற்ற இரண்டு அத்தியாயங்கள் சகுணப் பிரம்ம விஷயமாயும் இருக்கின்றன, ஈசாவாஸ்யத்தில் சகுண நிர்

குண பிர்ம்ம உபதேசம் செய்யப்பட்டிருப்பதுபோல் இந்த உபநிஷத்திலும் செய்யப்பட்டிருக்கின்றது.

இந்த உபநிஷத்தின் முக்கியமான விஷயங்களாவன :—

## 1 - வது அத்தியாயம்.

1. மனது முதலியவைகள் எவனால் ஏவப்படுகின்றன என்னும் கேள்வி கேட்கப்படுகின்றது. மனது உபலக்ஷணம்.

2 - 8. இதற்கு உத்தரமும் ஆத்மஸ்வரூபமும் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## 2 - வது அத்தியாயம்.

1 - 4. குருவுக்கும் சிஷ்யனுக்கும் நடந்த சம்பாஷணையில் ஆத்மா எவ்விதத்தில் அறியப்படும் என்பது விவரிக்கப்படுகின்றது.

5. இந்த மந்திரம் இந்த லோகத்தில் இந்த சரீரம் இருக்கும்போதே இந்த ஞானம் சம்பாதிக்கத்தக்கது என்பதைக்கூறுகிறது.

## 3 - வது அத்தியாயம்.

1 - 12. பிரம்மத்துக்கும் தேவதைகளுக்கும் நடந்த சம்பாஷணையில் தேவதைகளின் சாமர்த்தியக்குறைவு வெளிப்படுகின்றது. உமையின் தர்சனம்.

## 4 - வது அத்தியாயம்.

1. பிரத்தியக்ஷப் பிரபஞ்சத்தை அதிக்கிரமித்த கேவல ஞான பூமிகையை உமா என்பதால் அறியத்தக்கது. இந்த கேவல ஞானத்தால்தான் பிரம்மம் அறியத்தக்கது.

2 - 3. இந்திரன் முதலான தேவதைகளின் மாஹாத்மிய விசேஷம்.

4 - 5. பிரம்மவிஷயமாய் அதிதைவத அத்தியாத்ம திருஷ்டாந்தங்கள். பிரம்மத்தின் சாமீப்பியத்தை மனதினால் அடையலாமேதவிர இந்திரியங்களால் அடையமுடியாது.

6. ஆத்மாவை அறிந்தவன் எல்லாராலும் பூஜிக்கத்தக்கவன்.

7-8. குருவானவர் தான் சொல்லவேண்டியதைச் சொல்லியாய்விட்டது என்று சொல்லி, இந்த வித்தைக்குச் சாதனமானவைகளைச் சொல்லுகிறார்.

9. பல சுருதி.

## விசிஷ்டாத்வைதம்.

இந்த உபநிஷத்திற்கு ஸ்ரீ ரெங்கராமானுஜாசாரியார் அவர்கள் பாஷ்யம் எழுதி யிருக்கிறார்கள். இந்த உபநிஷத்தில் பிரம்ம ஸ்வரூபம் கேள்வி மறுமொழி ரூபமாய் நிரூபிக்கப்படுகின்றது. அசே

தனமான மனது முதலியவை யாரால் ஏவப்பட்டு தங்கள் தங்கள் காரியங்களைச் செய்கின்றன என்பது கேள்வி. எதினால் இவைகள் ஏவப்பட்டு, எதை இவைகள் அறியவில்லையோ அதுவே பிரம்மம். இது அறியப்பட்டவைகளைவிடவும் அறியப் படாதவைகளைவிடவும் வேறு. ஜனங்கள் உபாசிக்கும் தேவதைகள் பிரம்மமன்று. இந்த பிரம்மம் பூராவாக அறியப்படமாட்டாது. பரமாத்ம ஞானத்தால்தான் மோக்ஷம் சித்திக்கும். இந்த ஜன்மத்திலேயே இது சம்பாதிக்கத்தக்கது, இது நிரதிசய சக்தியுடையது என்பதைக் காட்டும் பொருட்டு ஒருகதை சொல்லப்படுகிறது. இக்கதையில் பார்வதி இந்திரனுக்கு பிர்மோபதேசம் செய்கிறாள். இந்த பிர்மத்தை தீர்க்ககாலம் தியானிக்க முடியாது. வேதங்கள் பிரம்ம வித்தை உண்டாவதற்குக் காரணங்கள். தபஸ்முதலியவைகள் ஒருவனுடைய ஞானத்தைத் திடப்படுத்துகின்றன. இவைகளை அறிந்தவன் வைகுண்டலோகத்தை அடைகிறான்.

(சுருக்கமான விஷயங்கள் 'அத்வைதத்திற்போலவே யிருப்பதால் மறுபடியும் எழுதப்படவில்லை.)

## துவைதம்.

ஈசாவாஸ்யத்துக்குப்போல கேனோபநிஷத்திற்கும் பாஷ்யம், டீகை, கண்டார்த்தம் ஏற்பட்டிருக்கின்றன. ஸ்ரீ ஆநந்ததீர்த்தாசாரியார் பாஷ்யம் செய்திருக்கிறார்கள். ஜய தீர்த்தருடைய சிஷ்யராகிய வியாச தீர்த்தர் ஷெ பாஷ்யத்திற்கு ஒரு சுருக்கமான டீகை செய்திருக்கிறார். வேதவியாசதீர்த்தருடைய சிஷ்யரான வேதேசபிக்ஷு என்பவர் டீகை செய்திருக்கிறார். இராகவேந்திர சுவாமிகள் கண்டார்த்தம் செய்திருக்கிறார்கள். இவர்களால் சொல்லப்பட்ட விஷயங்களெல்லாம் இந்த மொழிபெயர்ப்பில் கோர்வையாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. டீகாகாரரும் கண்டார்த்தக்காரரும் வெவ்வேறு அர்த்தங்களைக் கொடுக்கும்போது, பேதார்த்தங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. நூதனமாய் மத்வ விஷயங்களைப் பார்க்கிறவர்களுக்கு இந்தக் கோர்வை வெகு உபயோகமுள்ளதாக இருப்பது மன்றியில் டீகை முதலியவைகளை தனித்தனியே படித்தவர்களுக்குக்கூட உபயோகமா யிருக்கலாம்.

இந்த உபநிஷத்து சிவனுக்கும் பிரம்மாவுக்கும் நடந்த சம்பாஷணை ரூபமாயிருக்கின்றது. சகல இந்திரியங்களையும் நியமனம் செய்கிறவன் யார் என்று சிவன் கேட்க, பரமாத்மா என்று பிரம்மா உத்தரஞ்சொல்லுகிறார். இந்தபரமாத்மா ஸ்வதந்திரன்; श्रोत्रस्य श्रोत्रं

ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் என்பதினால் சகலத்தையும் நியமனம் செய்கிறவன்; यदिदमुपासते யதிதமுபாஸதே என்பதினால் ஜீவனுக்குச் சமீபத்தி லிருக்கிறவன்; येन प्राणः प्रणीयते யேந ப்ராண: ப்ரணீயதே என்பதினால் சகலத்தையும் நியமனம் செய்கிறபிராணனை நியமனம் செய்கிறவன்; अन्यदेवतद्विदितात् அந்யதேவ தத்விதிதாத் என்பதினால் உபமானமற்றவன்; येन वागभ्युदितं யேநவாகப்யுதிதம் முதலிய வசனங்களால் சர்வஞ்ஞன்; சகலத்திற்கும் நியாமகனாக இருப்பதால் சர்வசக்திமான்; न प्राणति நப்ராணதி என்பதினால் ஸ்வதந்திரன், ஆகையால் சர்வ தோஷமற்றவன்; अविदितात् अधि அவிதிதாததி என்பதினால் சர்வோத்தமன்; यस्यामतं யஸ்யாமதம் என்பதினால் பூர்ணமாய் அறியப்படாதவன்; नश्रृणोति நஶ்ருணோதி என்பதினால் இந்திரியங்களுக்கு அகோசரன்; यत्वाचानभ्युदितं யத்வாசாநப்யுதிதம் என்பதால் சர்வ வேதங்களாலும் பூர்ணமாய் வர்ணிக்கப் படாதவன்.

பிர்ம்மம் இப்படிப்பட்ட மாஹாத்மியத்தோடு கூடியிருப்பதால் அதை பூர்ணமாய் ஒருவனும் அறியமாட்டான். ஆகையால் அவரவர்களுடைய யோக்கியதைக்குத் தக்கபடி அவரவர்கள் பிரம்ம ஞானத்தை சம்பாதித்து இஷ்டசித்தியை அடையவேண்டியது. இந்த பிராமணமுதலிய சரீரத்திலேயே இது சம்பாதிக்கத் தக்கது. இந்த விஷயம் முதலிரண்டு அத்தியாயங்களில் பிரஸ்தாபிக்கப்படுகின்றது.

மூன்றாவது அத்தியாயத்தில், இந்த பிரம்மத்தின் பூர்ணஞானமுண்டாகாதென்னும் விஷயத்தில் ஒரு கதை சொல்லப்படுகின்றது. பிரம்மம் யக்ஷரூபத்தைத் தரித்த சமயத்தில் இந்திரன், அக்கினி, வாயு, இவர்கள் அதை அறியமுடியாமல் (4 - வது அத்தியாயம்) பார்வதியின் உபதேசத்தால் இந்திரன் முதலிலும், இந்திரனிடமிருந்து மற்றவர்களும் பிரம்மத்தைத் தெரிந்துகொண்டார்கள்.

இந்தப்பிரம்மஞான முண்டாவதற்கு வேதங்களும், வேதாங்கங்களும், மீமாம்சையும் காரணம். இந்த ஞானம் ஸ்திரமாய் நிலைநிற்கும் பொருட்டு தபஸ் முதலியவைகள் காரணங்கள். இந்த உபநிஷத்தை அறிகிறவன் சகல பாபங்களு மற்றவனாய் சச்சிதாநந்த ரூபபிரம்மத்தை அடைகின்றான்.

ஈசாவாஸ்யத்தின் 15-வது பக்கத்தில் ஷட்விதலிங்கங்களின் விவரம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இவ்விடத்தில் அவைகளை காட்டிய வசனங்கள்மட்டும் எழுதப்படும்.

1. **श्रोत्रस्य श्रोत्रं** ஶ்ரோத்ரஸ்யஶ்ரோத்ரம் (காதுக்குக்காது) என்னும் I - 2 வது மந்திரத்தில் உபக்கிரமலிங்கமும், **प्रतिबोधविदितं** ப்ரதிபோதவிதிதம் (ஒவ்வொரு விர்த்தி ஞானுவபாசகன் என்னும் II - 4 வது வாக்கியத்தினால் உபசம்ஹார லிங்கமும் விளங்குகின்றன.

2. **तदेवब्रह्मत्वं विद्धि** ததேவப்ரஹ்மத்வம்வித்தி (அதையே பிரம்மம் என்று நீ அறி) முதலிய I-4-8 மந்திரங்களால் அப்பியாச லிங்கம் காணப்படுகின்றது.

3. **नतत्रचक्षुर्गच्छति** நதத்ரசக்ஷுர்கச்சதி (பிரம்மத்தினிடத்தில் கண்போகிறதில்லை) முதலிய I - 3 வாக்கியத்தால் உபநிஷத்துக்களுக்கு வேறான பிரமாணங்களுக்கு விஷயமல்ல என்கிற அபூர்வதா லிங்கம் காணப்படுகின்றது.

4. **भूतेषु भूतेषुविचित्यधीराः** பூதேஷு பூதேஷு விசித்யதீராঃ (சகல பூதங்களிலும் பிரம்மம் இருக்கிறதாக அறிந்து) **प्रेत्यास्माल्लोकादमृताभवन्ति** ப்ரேத்யாஸ்மால்லோகாதம்ருதா பவந்தி (இந்த தேகத்தை விட்டபிறகு அமிருதர்களாகிறார்கள்) என்கிற II-5வது வாக்கியம் பல லிங்கத்தை விளக்கிவைக்கிறது.

5. **ब्रह्मह देवेभ्योविजिग्ये** ப்ரஹ்மஹ தேவேப்யோவிஜிக்யே (பிரம்மம் தேவதைகளின்பொருட்டு ஜயத்தை அடைந்தது) என்கிற III-1 வது வாக்கியத்தில் அர்த்தவாத லிங்கம் காணப்படுகின்றது.

6. **यस्यामतं तस्यमतं** யஸ்யாமதம் தஸ்யமதம் (எவனுக்கு அறியப்படாததாக இல்லையோ அவனுக்கு அறியப்பட்டதாக இருக்கிறது) என்கிற II-3வது வாக்கியத்தால் தர்க்கயுக்தியாகிய உபபத்தி லிங்கம் விளங்குகின்றது.

இந்த லிங்கங்களால் கேனோபநிஷத்தின் தாற்பரியம் அத்வைதபரமாக நிரூபிக்கப்படுகின்றது.

ஓம்

# உபநிஷதர்த்த தீபிகை.

## கேன உபநிஷத்து

### சாந்தி மந்திரம்.

ओं सहनाववतु सहनौभुनक्तु सहवीर्यं करवावहै ।
तेजस्वि नावधीतमस्तु माविद्विषावहै ॥
ओं शान्तिः । शान्तिः । शान्तिः ॥

𑌓𑌂 𑌸𑌹𑌨𑌾𑌵𑌵𑌤𑍁 𑌸𑌹𑌨𑍌𑌭𑍁𑌨𑌕𑍍𑌤𑍁 । 𑌸𑌹𑌵𑍀𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑌵𑌾𑌵𑌹𑍈 ।
𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑌿𑌨𑌾𑌵𑌧𑍀𑌤𑌮𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌵𑌿𑌦𑍍𑌵𑌿𑌷𑌾𑌵𑌹𑍈 ॥
𑌓𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 ।

(ब्रह्म 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, = பிரம்மம்)
नौसह 𑌨𑍌𑌸𑌹, = (குரு,நான், ஆக) இருவரையும்சேர்த்து
अवतु 𑌅𑌵𑌤𑍁, = இரக்ஷிக்கட்டும்
नौसह 𑌨𑍌𑌸𑌹, = எங்களிருவரையும் சேர்த்து
भुनक्तु 𑌭𑍁𑌨𑌕𑍍𑌤𑍁, = பாலனம் செய்படட்டும்
(आवां) सह 𑌆𑌵𑌾𑌂𑌸𑌹, = நாம் இருவரும்
वीर्यं 𑌵𑍀𑌰𑍍𑌯𑌂, = வித்தியாநிமித்தமான சாமர்த்தியத்தை
करवावहै 𑌕𑌰𑌵𑌾𑌵𑌹𑍈, = உபயோகம் செய்யவேண்டும்
नौअधीतं 𑌨𑍌𑌅𑌧𑍀𑌤𑌂, = நாம் அத்தியனம் செய்த கிரந்தமெலாம்
तेजस्वि 𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑌿, = அர்த்தத்தை பிரகாசம் செய்கிறதாக
अस्तु 𑌅𑌸𑍍𑌤𑍁, = இருக்கட்டும்
(आवां 𑌆𑌵𑌾𑌂, = நாம்)
मा विद्विषावहै 𑌮𑌾𑌵𑌿𑌦𑍍𑌵𑌿𑌷𑌾𑌵𑌹𑍈, = பரஸ்பரம்துவேஷம் கொள்ளவேண்டாம்.

ओंशान्तिः ३ 𑌓𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 3-சாந்தி இருக்கட்டும் (3 தடவை). இந்த சாந்தியின் அர்த்தம் வித்தியாரணிய சுவாமிகளின் பாஷ்யத்தை அனுசரித்து செய்யப்பட்டிருக்கிறது :—குருவானவர் கிருதார்த்தராயிருப்பதால் அவர் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளும் படியானதாக ஒன்றுமில்லை. ஆகையால் சிஷ்யன் இந்த மந்திரத்தால் தனக்கும் குருவுக்கும் கலியாணம் (க்ஷேமம்) ஆகவேண்டும் என்று பிரார்த்திக்கிறான்.

**सहनाववतुसहनौभुनक्तु** = ஸஹநாவவது ஸஹநௌபுநக்து குருவின் அனுக்கிரஹத்தின் பேரில் எந்தப்பிர்ம்மம் எனக்குத் தெரியப்போகிறதோ, அந்தப் பிர்ம்மம் எங்களிருவரையும் இரக்ஷிக்கட்டும், பாலனம் செய்யட்டும். இரக்ஷித்தல், பாலனஞ்செய்தல் இவ்விரண்டு பதங்களும் ஒரே அர்த்தத்தைக் குறிப்பிடுவதானாலும், இரண்டு வெவ்வேறு காலங்களில் இரக்ஷித்தலை ஒரேகாலத்தில் பிரார்த்திப்பதைக் குறிப்பிடுகின்றன. எப்படியெனில்:-(1) குருவானவர் ஆலசிய மன்றியில் உபதேசிக்கவேண்டும். அப்படி உபதேசித்த அர்த்தத்தை நான் செவ்வையாக சந்தேகமன்றியில் கிரகிக்கவேண்டும். இவ்விதமாக உபதேசகாலத்தில் பிரம்மம் எங்களை இரக்ஷிக்கவேண்டும். இது முதல்வாக்கியத்தின் அர்த்தம் (2) உபதேசித்த அர்த்தத்தை நான் கிரகித்ததினால் என்னுடைய அஞ்ஞானம் நிவிர்த்தியாகவேண்டும். என்னுடைய அஞ்ஞான நிவிர்த்தியைப் பார்த்து குருவுக்குச் சந்தோஷம் உண்டாகவேண்டும். இவ்விதமாக உபதேசத்திற்குப் பிற்பட்ட காலத்தில் பிர்ம்மம் எங்களைப் பாலனம் செய்யட்டும். இது இரண்டாவது வாக்கியத்தின் அர்த்தம் **सहवीर्यं करवावहै** — ஸஹவீர்யங்கரவாவஹை நாமிருவரும் எங்களுடைய சாமர்த்தியத்தை வித்தைவிஷயத்தில் உபயோகம் செய்யவேண்டும். அதற்கு உபாயம் எப்படியெனில்

**तेजस्वि...अस्तु** — தேஜஸ்வி...ஸ்து நாம் அத்தியயனம் செய்த கிரந்தங்களெல்லாம் அவைகளின் அர்த்தத்தைப் பிரகாசம் செய்வதாய் இருக்கட்டும்.

**मा** ...ா... நாம் ஒருவனை ஒருவர் துவேஷிக்கக்கூடாது. அதாவது குருவானவர் செவ்வையாய் சொல்லிக்கொடுக்கவில்லை என்று சிஷ்யன் குருவைத் துவேஷித்தல், சிஷ்யன் செவ்வையாய் சேவிக்கவில்லை அல்லது கேட்கவில்லை என்று குருவானவர் சந்தோஷமடையாமலிருத்தல், இவ்விரண்டும் சம்பவிக்கக்கூடாது.

**ओंशान्तिः** ஓம் ஶாந்தி: (3 தடவை) ஆத்தியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் ஆகிய மூன்றுவித தாபங்களும் சாந்தியடையட்டும்.

ओं आप्यायन्तुममाङ्गानि वाक्प्राणश्चक्षुः ।
श्रोत्रमथोबलमिन्द्रियाणिच सर्वाणिसर्वं ।
ब्रह्मौपनिषदंमाऽहंब्रह्मनिराकुर्यां मामा ।
ब्रह्म निराकरोदनिराकरणमस्त्व निराकरणं ।
मेऽस्तुतदात्मनि निरते य उपनिषत्सु ।

धर्मास्तेमयिसन्तुते मयिसन्तु ॥

ओंशान्तिः । शान्तिः । शान्तिः ॥

𑌓𑌂 𑌆𑌪𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤𑍁𑌮𑌮𑌾𑌂𑌗𑌾𑌨𑌿𑌵𑌾𑌕𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌃
𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑌥𑍋𑌬𑌲𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍌𑌪𑌨𑌿𑌷𑌦𑌂𑌮𑌾𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌰𑌾𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌂 𑌮𑌾𑌮𑌾
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑍋𑌦𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌂
𑌮𑍇𑌸𑍍𑌤𑍁𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌨𑌿𑌰𑌤𑍇𑌯 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁
𑌧𑌰𑍍𑌮𑌾𑌸𑍍𑌤𑍇 𑌮𑌯𑌿𑌸𑌨𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌮𑌯𑌿 𑌸𑌨𑍍𑌤𑍁

𑌓𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 ।

मम 𑌮𑌮 = என்னுடைய

अंगानि 𑌅𑌂𑌗𑌾𑌨𑌿 = அங்கங்கள்

वाक् 𑌵𑌾𑌕𑍍 = வாக்கு

प्राणः 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 = பிராணன்

चक्षुः 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 = நேத்திரம்

श्रोत्रं 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 = சுரோத்திரம்

अथो 𑌅𑌥𑍋 = அப்படியே

बलं 𑌬𑌲𑌂 = பலம்

सर्वाणिच 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿𑌚 = சமஸ்தமான

इन्द्रियाणि 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 = இந்திரியங்கள்

आप्यायन्तु 𑌆𑌪𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤𑍁 = தங்கள் தங்கள் காரியங்களைச் செய்ய சமர்த்தங்களாயிருக்கட்டும்.

सर्वं 𑌸𑌰𑍍𑌵𑌂 = சமஸ்தமும்

औपनिषदं 𑌔𑌪𑌨𑌿𑌷𑌦𑌂 = உபநிஷத்தால் பிரதிபாதிக்கப்பட்ட

ब्रह्म 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 = பிரம்மமே

अहं 𑌅𑌹𑌂 — நான்

ब्रह्म 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 = பிரம்மத்தை

मानिराकुर्यां 𑌮𑌾𑌨𑌿𑌰𑌾𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌂 = தியாகம் செய்யக்கூடாது.

ब्रह्म 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 = பிரம்மமும்

मा 𑌮𑌾 = என்னை

मानिराकरोत् 𑌮𑌾𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑍋𑌤𑍍 = தியாகம் செய்யக்கூடாது

अनिराकरणं 𑌅𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌂 = பிரம்மத்தை விடாமல் சிந்தித்தல்

अस्तु 𑌅𑌸𑍍𑌤𑍁 = இருக்கட்டும்

मे 𑌮𑍇 = எனக்கு

**अनिराकरणं** அநிராகரணம் = தியாகம் செய்யாமலிருத்தல் அதாவது பிரம்மம் எனக்கு சாக்ஷாத்கார மாகுதல்

**अस्तु** அஸ்து = இருக்கட்டும்

**तत्** தத் = அந்த

**आत्मनि** ஆத்மநி = ஆத்ம ஸ்வரூபத்தில்

**निरते** நிரதே = இரமிக்கிற புருஷர்களுடைய

**ये** யே = எந்த

**धर्माः** தர்மா: = தர்மங்கள்

**उपनिषत्सु** உபநிஷத்ஸு = உபநிஷத்துக்களில

**प्रतिपादिताः** ப்ரதிபாதிதா: (பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றனவோ)

**ते** தே = அவைகள்

**मयि** மயி = என்னிடத்தில்

**सन्तु** ஸந்து = இருக்கட்டும்

**ते** தே = அவைகள்

**मयि** மயி = என்னிடத்தில

**सन्तु** ஸந்து = இருக்கட்டும்

**ओं शान्तिः ३** ஓம் சாந்தி: = ஆத்தியாத்மிகம் முதலிய மூன்று வித தாபங்கள் சாந்தியடையட்டும்.

(1) **अंगानि** = அங்காநி இவ்விடத்தில் "அங்கம்" என்பதற்கு இந்திரியங்களின் அதிஷ்டானம் அதாவது இருப்பிடம் என்று அர்த்தம். இந்திரியங்களும் அவைகளின் இருப்பிடங்களாகியகோளகங்களும் வெவ்வேறு. உதாகரணம்:—நேத்திரேந்திரியமும் அதின் கோளகமாகிய கண்ணும் வெவ்வேறு. இவ்விரண்டும் ஒன்றானல் கண்ணாகிற கோளகமிருக்குமிடத்தில் எல்லாம் பார்க்கும் சக்தி இருக்கவேண்டும். சிலருக்குக் கண்பார்வைக்கு சுத்தமாகக் காணப்பட்டும் கண்பார்க்கிறதில்லை. இதனால் இரண்டும் ஒன்றல்ல வென்பது நிச்சயப்படுகிறது. இப்படியே ஒவ்வொரு இந்திரியமும் அதினதின் ஸ்தானமும் வெவ்வேறு. ஆகையால் "அங்கம்" என்னும் பதத்தாலும் "இந்திரியம்" என்னும் பதத்தாலும் ஒரே அர்த்தமல்ல என்பது தெளிவாகிறது.

(2) **वाक्चक्षुश्श्रोत्रं इन्द्रियाणि** — வாக்சக்ஷு: ச்ரோத்ரம் இந்த்ரியாணி இந்திரிய சப்தத்தாலேயே வாக்கு, கண், சுரோத்திரம் இவைகள் கிரகிக்கப்படுவதால் இவைகளை வெவ்வேறாகச் சொன்னது இரண்டு காரணத்தால் என்று அறியவேண்டியது. (1) **गोबलीवर्द**

கோபலீவர்த ந்யாயத்தால்[1] அதாவது गो கோ என்றாலேயே பசுமாடு என்றும் காளைமாடு என்றும் அர்த்தம்.

बलीवर्द् பலீவர்த் என்றால் காளைமாடு என்று அர்த்தம். ஆயினும் இரண்டு பதங்களும் சேர்த்துச் சொல்லப்படுகின்றன. அப்படிப்போல இவ்விடத்திலும் வாக்கு முதலிய பதங்களையும் இந்திரயபதத்தையும் அறியவேண்டியது. (2) அத்தியயனம், ஞானம் சம்பாதித்தல், இவ்விஷயத்தில் வாக்கு, நேத்திரம், சுரோத்திரியம் இம்மூன்று இந்திரியங்கள் தான் உபயோகப் படுவதால், இவ்விடத்தில் அவைகளின் விசேஷத்தைக் காட்டும் பொருட்டும் அவைகள் வெவ்வேறாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன வென்று நினைக்கவேண்டும்.

मा...निराकरोत् மா...நிராகரோத் பிரஹதாரணியக உபநிஷத்து 2—4—6 ல் சொல்லியபடி எவன் சகலத்தையும் ஆத்ம ஸ்வரூபத்திற்கு வேறாய்ப் பார்க்கிறானோ, அதாவது ஆத்ம ஸ்வரூபமாய்ப் பார்க்கவில்லையோ, அவன் எல்லாருக்கும் அபராதியாகிற படியால் அவனை எல்லாரும் விட்டுவிடுகிறார்கள். பிராமணன், க்ஷத்திரியன், இந்தப் பிரபஞ்சம் சகல பூதங்கள், எல்லாம் ஆத்மாவே. இந்தச்சுருதி வசனப்படி நான் सर्वंब्रह्मोपनिषदं ஸர்வம்ப்ரஹ்மோபநிஷதம் அதாவது எல்லாம் உபநிஷத்தில் பிரதிபாதிக்கப் பட்டிருக்கிற பிரம்மமே என்று பார்ப்பதால் நான் ஒருவனுக்கும் அபராதம் செய்தவனாக ஆகிறதில்லை. ஆகையால் என்னை ஒருவரும் தியாகம் செய்யக்கூடாது.

(3) अनिराकरणमस्तु அநிராகரணமஸ்து (இரண்டுதடவை) பிரம்ம சிந்தனையில் நான் எப்போதும் தத்பரனாயிருக்கவேண்டும். பிரம்மம் எனக்கு சாக்ஷாத்காரத்தைக் கொடுக்கவேண்டும். பகவத்கீதை 6 - 30 ல் சொல்லியிருக்கிறதாவது எவன் என்னை எங்கும் பார்க்கிறானோ, எல்லாவற்றையும் என்னிடத்தில் பார்க்கிறானோ, அவனுக்கு நான் காணப்படாமல் போகிறதில்லை, அவனும் என்கண்ணைவிட்டு மறைகிறதில்லை. இப்படிப்பட்ட ஸ்திதி இருக்க வேண்டியது.

---

1. गोबलीवर्द् கோபலீவர்த ந்யாயத்தில் गो கோ என்பதில் बलीवर्द् பலீவர்த் சேர்ந்திருந்தாலும் बलीवर्द् பலீவர்த்தத்தின் விசேஷ உபயோகத்தைக் காட்டும்பொருட்டு அதைபிரித்து வேறாகச் சொல்லுவது போல் இவ்விடத்திலும் இந்திரியாணி என்பதில் வாக்கு, கண், காது சேர்ந்திருந்தாலும் இவைகளின் விசேஷ பிரயோஜனத்தைக் காட்டும்பொருட்டு இவைகளை பிரித்து வேறாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

(4) आत्मनिरमते... ஆத்மநிரமதே ஆத்மாவினிடத்தில் இரமிக்கிற புருஷனுக்கு உபநிஷத்தில் எந்த தர்மம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த தர்மம் என்னிடம் இருக்கவேண்டும். அந்த தர்மம் யாதெனில் :—பிரஹ 4 - 4 - 23 :—அவனுக்கு தர்மா தர்மரூப பாபம் சம்பவிக்கிறதில்லை. இப்படி ஆத்ம ஸ்வரூபத்தைப் பார்க்கிற புருஷன் சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சமாதானம் முதலியவைகளுடன் கூடினவனாய் சரீரத்தில் ஆத்மாவையும் சகல ஜகத்தை ஆத்மரூபமாயும் பார்க்கிறான். அவனுக்கு பாபம் (புண்ணியமும் மோக்ஷத்திற்கு பிரதிபந்தகமா யிருப்பதால் பாபரூபமா யிருக்கிறது) ஒட்டுகிறதில்லை. அவன் சகலபாபங்களையும் ஞானமாகிற அக்கினியால் கொளுத்திவிடுகிறான். பாபம் அவனுக்கு தாபத்தைக்கொடுக்கிறதில்லை. அவன் தர்மா தர்மமற்றவனும், இச்சையற்றவனும், சம்சயமற்றவனும், அதாவது, நான்தான் சகலத்துக்கும் ஆத்மாவான பிர்மம் என்கிற நிச்சயமுள்ளவனும் ஆகிறான். இந்தஸ்திதி உண்டாகும்போதுதான், பிராமணன், அதாவது பிர்மத்தை அறிகிறவன், என்கிறபதம் அவன் விஷயத்தில் அர்த்தமுள்ளதாக ஆகிறது. (அதற்குமுன் இந்தபதம் கௌணம்தான்.)

तेमयिसन्तु தெமயிஸந்து என்று இரண்டுதடவை சொன்னது ஆதரத்தைக் காட்டும் பொருட்டாம்.

ஓம் - ஆத்தியாத்மிகம் முதலிய தாபத்திரயங்கள் சாந்தியடையட்டும்.

---

ओंतत्सत्.

केनोपनिषत्.

1. ओं केनेषितं पतति प्रेषितंमनः ।
केनप्राणः प्रथमः प्रैतियुक्तः ।
केनेषितां वाचामिमां वदन्ति ।
चक्षुः श्रोत्रं कउदेवो युनक्ति ॥ 1 ॥

𑌓𑌂 𑌤𑌤𑍍𑌸𑌤𑍍.

𑌕𑍇𑌨𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

𑌓𑌂 𑌕𑍇𑌨𑍇𑌷𑌿𑌤𑌂 𑌪𑌤𑌤𑌿 𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌂𑌮𑌨𑌃 ।
𑌕𑍇𑌨𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 ।
𑌕𑍇𑌨𑍇𑌷𑌿𑌤𑌾𑌂 𑌵𑌾𑌚𑌮𑌿𑌮𑌾𑌂 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 ।
𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌕𑌉𑌦𑍇𑌵𑍋𑌯𑍁𑌨𑌕𑍍𑌤𑌿 ॥

केन 𑌕𑍇𑌨 = எவனால்
इषितं 𑌇𑌷𑌿𑌤𑌂 = இச்சிக்கப்பட்டு
प्रेषितं 𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌂 = பிரேரணை செய்யப்பட்டதாய்
मन: 𑌮𑌨𑌃 = மனது
पताति 𑌪𑌤𑌤𑌿 = தன் விஷயத்தைக் குறித்துப்போகிறது.
केन 𑌕𑍇𑌨 = எவனால்
युक्त: 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 = ஏவப்பட்டதாய்
प्रथम: 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 = சகல இந்திரியங்களிலும் முக்கியனான
प्राण: 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 — பிராணன்
प्रैति 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 = பிரவிர்த்திக்கிறான்
केन 𑌕𑍇𑌨 = எவனால்
इषितां 𑌇𑌷𑌿𑌤𑌾𑌂 = இச்சிக்கப்பட்டதாய்
इमां 𑌇𑌮𑌾𑌂 = இந்த
वाचं 𑌵𑌾𑌚𑌂 = வசனங்களை
(लौकिका: 𑌲𑍌𑌕𑌿𑌕𑌾𑌃 = ஜனங்கள்)
वदान्ति 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 = சொல்லுகிறார்கள்
क: उ 𑌕𑌃𑌉 = எந்த
देव: 𑌦𑍇𑌵𑌃 = தேவதை, பிரகாசமுள்ள எவன்
चक्षु: 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 = நேத்திரேந்திரியத்தையும்
श्रोत्रं 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 = சுரோத்திரேந்திரியத்தையும்
(स्वस्वेविषये 𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑍇 = அதனதன் விஷயத்தில்)
युनक्ति 𑌯𑍁𑌨𑌕𑍍𑌤𑌿 = சேர்த்துவைக்கிறான் அதாவது ஏவுகிறான்.

## சங்கரபாஷ்யம்.

केनेषितं கேநேஷிதம்[2] = என்பது எந்த உபநிஷத்துக்கு முதலாவது பதமாயிருக்கிறதோ அந்த உபநிஷத்து பரப்பிரம்மத்தை விஷயமாக உடைத்தா யிருக்கிறது. அந்த உபநிஷத்தை வியாக்கியானம் செய்வதற்காக ஒன்பதாவது அத்தியாயம் ஆரம்பிக்கப்

## விசிஷ்டாத் துவைதபாஷ்யம்.

अतसीगुच्छसच्छाय मञ्चितोरस्थलंश्रिया ।
अञ्जनाचलशृङ्गारमञ्जलिर्ममगाहताम् ॥

அதஸீகுச்ச ஸச்சாயமஞ்சிதோரஸ்தலம் ச்ரியா।
அஞ்ஜநாசலச்ருங்காரமஞ்ஜலிர்மமகாஹதாம் ॥

அர்த்தம்:—காசாம்பூ கொத்துபோல் கருப்பாயும் இலக்ஷ்மியால் அலங்கரிக்கப்பட்ட மார்பு உடையவராயும மைமலைக்குச் சமானமாயு மிருக்கிற பகவானை என்னும் செய்யப்படும் அஞ்சலி பந்தம் அடையட்டும்.

அவதாரிகை:—பரமாத்மாவின் ஸ்வரூபத்தை கேள்வி மறுமொழி ரூபமாய் நிரூபிக்கும் பொருட்டு உபநிஷத்தை ஆரம்பிக்கிறார்.

## துவைதபாஷ்யம்.



### கேனோபநிஷத்து.

பலவித சம்சார துக்கத்தைப் பார்ப்பதினால் விரக்தனையும், சமதமாதிகளுடன் கூடினவனையு மிருக்கிற அதிகாரியின் மோக்ஷத்திற்காக பகவத் ஸ்வரூபத்தைப் பிரதிபாதிக்கும் தலவகாரோபநிஷத்து (இதரர்களால்) சரியாக வியாக்கியானம் செய்யப்படாததினால் பிரவிர்த்திக்கவில்லை என்று நினைக்கும் பகவான் ஆநந்ததீர்த்த முனிவர் அவ்வுபநிஷத்தைச் சரியாய் வியாக்கியானம் செய்ய இச்

2. அசம்சாரியான பிரம்மம் உபநிஷத்தால் பிரதிபாத்தியமா யிருக்கிறது. ஆகையால் அது உபநிஷத்திற்கு விஷயமாகிறது. இந்த பிரம்மம் அதாவது ஆத்மா நான் என்னும் ஞானத்திற்கு விஷயமாவதால் சம்சாரியாகிறது. ஆனதால் அது உபநிஷத்துக்கு விஷயமன்று. ஆகவே உபநிஷத்தும் வியாக்கியானம் செய்யத்தக்கதன்று. இந்த சங்கைக்குச் சமாதானமென்னவெனில் அஹங்காரசாக்ஷியான பிரம்மம் சம்சாரி என்னும் ஞானத்தை உண்டு பண்ணும் இந்திரியங்களுக்கு விஷயமாகாதபடியால் பிரம்மம் அசம்சாரி ஆகவே பிரம்மம் உபநிஷத்திற்கு விஷயமாவதால் உபநிஷத்தை வியாக்கியானம் செய்யலாம்.

ச:—படுகிறது. இதற்குமுன் 3 சகல கர்மங்கள் 4, அவைகளுக்கு ஆசிரயமான பிராணனுடைய உபாசனை, கர்மங்களுக்கு அங்கமான (சாதனமான) சாமங்களின் 5 உபாசனைகள், காயத்திரசாமத்தின் 6 பிரணவரூப உபாசனை, சிஷ்யாசார்யர்களின் வம்சபரம்பரை 7,

து:—சிக்கிரவராய், இச்சித்த விஷயம் நிர்விக்கினமாய் முடியும் பொருட்டு, உபநிஷத்தால் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிற நாராயணனுடைய ஸ்துதியை சிஷ்யர்களுடைய சிக்ஷையின் பொருட்டு

अनन्तगुणपूर्णत्वादगम्याय सुरैरपि ।
सर्वेष्टदात्रे देवानां नमोनारायणायते ॥

அநந்தகுணபூர்ணத்வாதகம்யாய ஸுரைரபி ।
ஸர்வேஷ்டதாத்ரே தேவாநாம் நமோநாராயணாயதே ॥

என்னும் சுலோகத்தால் செய்கிறார்.

नतत्रचक्षुर्गच्छति(के3) நதத்ரசக்ஷுர்கச்சதி(கே3) முதலிய மந்திரங்களிற் சொல்லியபடி அநந்த குணங்களோடு கூடியிருப்பதால் தேவதைகளாலுங்கூட அறியப்படாதவராயும், ब्रह्महदेवेभ्यो विजिग्य (के 14)ப்ருஹ்மஹதேவேப்யோ விஜிக்ய (கே 14) என்று சொல்லியபடி தேவதைகளுக்கு சகல இஷ்டத்தையும் கொடுக்கிறவராயும், எப்போதும் அபரோக்ஷமாயிருந்தாலும் இந்த கிரந்தம் செய்யும் சமயத்தில் விசேஷமாய் அபரோக்ஷராயு மிருக்கிற நாராயணருக்கு நமஸ்காரம். இந்த உபநிஷத்துக்கு நாராயணன் விஷயம். சர்வ இஷ்டம் பிரயோசனம். அதற்காக அவனை அறிய இச்சிக்கிறவன் அதிகாரி. ஆகையால் உபநிஷத்தை வியாக்கியானம் செய்வது யுக்தமே.

3. 8-அத்தியாயங்களுக்குப்பின் இந்த அத்தியாயத்தைச் சொல்லுவானேனெனின், முந்தின 8 - அத்தியாயங்களிற் சொல்லப்பட்ட கர்மங்களும் உபாசனைகளும் சாதனங்களாயும் கேனோபநிஷத்து என்னும் அத்தியாயம் சாத்தியமாயு மிருப்பதால் அவைகளுக்குப் பிந்தியே இந்த அத்தியாயமிருக்கவேண்டும்.

4. இதற்கு முன் கர்மகாண்டம் நிரூபிக்கப்பட்டது.

5. கர்மத்துக்குச் சாதகமாயும் காயனஞ்செய்ய யோக்கியமாயு மிருக்கிற சாமவேத மந்திரத்துக்கு சாமமென்றுபெயர். இந்த சாமத்தில் 5-பேதங்களும் 7-பேதங்களு மிருக்கின்றன. பூமி முதலிய ரூபங்களாக இதை உபாசிக்கும்படி சொல்லி யிருக்கிறது.

6. இந்த உபாசனை சாந்தோக்கிய 2 - 12 - 1-ல் சொல்லப்பட்டிருக்கிறது.

7. இந்த வம்சபரம்பரை சாந்தோக்கியம் 8 - 15 - 1-முதல் சொல்லப்பட்டிருக்கிறது.

ச:—இவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. எல்லாம் காரியரூபங்கள்தான்; அதாவது, நம்மால் அனுஷ்டிக்க யோக்கியமானவை. முன் சொல்லப்பட்ட கர்ம [8] உபாசனைகள் உத்தம பிரகாரமாய் அனுஷ்[9]டிக்கப்பட்டால், ஒன்றிலும் ஆசையில்லாமல் மோக்ஷம் வேண்டுமென்று இச்சிக்கும் புருஷனுடைய மனது சுத்தமாவதற்கு இவைகள் காரணமாகின்றன. அனுஷ்டிக்கிற புருஷன் ஆசையுள்ளவனாயும் ஞான [10] மன்றியிலுமிருந்தால் ஸ்ரௌத ஸ்மார்த்த கர்மங்கள், தக்ஷிண மார்க்கத்தை [11] அவன் அடைவதற்கும் [12] மறுபடியும் திரும்பி ஜனிப்பதற்கும் காரணமாகின்றன. (கர்மமார்க்கம் உபாசனமார்க்கம் இவைகளில்லாமல்) ஸ்வபாவமாய் ஏற்படும் சாஸ்திரங்களில் நிஷேதிக்கப்பட்டி மிருக்கிற கர்மங்களைச் செய்கிறவர்கள் பசுமரம் முதலியவைகளாகப் பிறக்கிறதாகிய அதோகதியை அடைகிறார்கள். இதற்குச் சுருதிப் பிரமாணம்:—

---

து:—இந்த உபநிஷத்தில் "யாரால் பிரேரணை செய்யப்பட்டது" என்று முதல் மந்திரத்தில் கேள்வி கேட்கப்பட்டிருக்கிறது. श्रोत्रस्य श्रोत्रं ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் (காதுக்குக் காது) என்று இரண்டாவது மந்திரத்தில் உத்தரம் சொல்லப்பட்டிருக்கிறது. கேட்

---

8. முந்திய 8-அத்தியாயங்களில் சொல்லப்பட்ட பிராணன் முதலியவைகளின் உபாசனைகளுக்கும் கர்மங்களுக்கும் பலன் சம்சாரம். எக்காரணத்தால் கர்மம் பிரம்மஞானத்திற்கு உபயோகமன்றோ அக்காரணத்தால் முந்தின 8 அத்தியாயங்களுக்கும் கேனோப நிஷத்து என்னும் 9-வது அத்தியாயத்திற்கும் சாதன சாத்தியரூப சம்பந்தம் பொருந்தவில்லை என்னும் சங்கையை நிவிர்த்திக்கும் பொருட்டு நித்தியகர்மம் ஞானத்தில் உபயோகப்படுகிறது என்பதை முதலில் காட்டுகிறார்.

9. காம்மிய கர்மத்தினுடையவும் நிஷேதிக்கப்பட்ட கர்மத்தினுடையவும் பலத்தை அவைகளில் வைராக்கியம் உண்டாவதற்காகச் சொல்லுகிறார்.

10. ஞானபதத்தால் தேவதாஞானம் அதாவது உபாஸனை என்று அறியத்தக்கது.

11. இது தூமமார்க்கம் என்றும் பிதர்யானம் என்றும் சொல்லப்படுகிறது. பிரஹதாரணியகம் 2-16-ல் இது விவரிக்கப்படும்.

12. பலாபேக்ஷையுடன் செய்யும் கர்மத்தினுடையவும் நிஷித்த கர்மத்தினுடையவும் பலத்தைச் சொல்லுகிறார். இதன் உத்தேசம் யாதெனின் அவைகளில் தோஷ திருஷ்டியால் வைராக்கியம் உண்டாகவேண்டுமென்பதாம்.

ச:—अथैतयो: पथोर्नकतरेण चनतानीमानि क्षुद्राण्यस कृदावर्तीनि भूतानि भवन्ति जायस्वम्रियस्वेत्येत त्तृतीयं स्थानं (छां 5-10-8)

அதைதயோ: பதோர்நகதரேண சநதாநீமாநி க்ஷுத்ராண்யஸக்ருதாவர்த்தீநி பூதாநி பவந்தி। ஜாயஸ்வ ம்ரியஸ்வேத்யேதத் த்ருதீயம் ஸ்தாநம் (சாம் 5-10-8)

(இதன் அர்த்தம்:—ஞான (உபாசனை) கர்ம மார்க்கங்களில் போகாதவர்கள் அர்ச்சிராதி மார்க்கத்திலாவது, தூமமார்க்கத்திலாவது ஒன்றிலும் போகாமல் அடிக்கடி இறப்பதும் பிறப்பதுமான கொசு, ஈ, புழு முதலான க்ஷுத்திர ஜந்துக்களாக ஆகிவிடுகிருர்கள். அடிக்கடி சாகிறதும் பிறப்பதும் மூன்ருவது மார்க்கம் என்பதாம்.) மேலும் प्रजा:तिस्रो अत्यायमीयु: ப்ரஜா: திஸ்ரோ அத்யாயமீயு: (ஜராயு என்கிற கர்ப பையிலிருந்து உண்டாகிறவர்கள், அண்டமென்கிற முட்டையிலிருந்து உண்டாகிற அண்டஜங்கள், பூமியைப் பிளந்துண்டாகும் மரம் முதலிய உத்பிஜங்கள், ஆக இந்த மூன்றுவித ஜந்துக்கள் அர்ச்சிராதி மார்க்கத்தையும் தூம மார்க்கத்தையும் விட்டு கஷ்டமான கதியை அடைகிருர்கள்.) என்கிற மந்திரமும் இப்படியே சொல்லுகிறது, எவனுடைய சித்தம் சுத்தமாயிருக்கிறதோ [13] அந்த நிஷ்காம (ஆசையற்ற) புருஷனுக்குத்

து:—டவன் யார் என்பதும் பதில் சொன்னவன் யாரென்பதும் தெரியவில்லை. இவர்களைக் குறிப்பிடும்பொருட்டு பாஷ்யகாரர் சொல்லுகிருர்.

वैजयन्तेसमासीन मेकान्तेचतुराननम् ।
विष्णोर्विविदिषुस्तत्वं पर्यपृच्छत्सदाशिव: ॥

வைஜயந்தே ஸமாஸீந மேகாந்தே சதுராநநம் ।
விஷ்ணோர் விவிதிஷுஸ் தத்வம் பர்யப்ருச்சத் ஸதாசிவ: ॥

அர்த்தம்:—தன்னுடைய அந்தரிக்ஷ ஸ்தானத்தில் உட்கார்ந்திருக்கிற சதுர்முக பிரம்மாவை, விஷ்ணுவின் தத்துவத்தை அறிய இச்சித்த சதாசிவன் பிரச்னம் செய்கிருர். ஆகவே இந்த உபநிஷத்து சிவனுக்கும் பிரம்மாவுக்கும் நடந்த சம்பாஷணை ரூபமாயிருப்பதால், இவ்விருவர்களும் இந்த உபநிஷத்திற்கு இரிஷிகளாக அறியத்தக்கவர்கள். இந்த உபநிஷத்தின் தேவதை பிரம்ம சப்

13. கர்மபலத்தில் விரக்தி அடைந்து சித்த சுத்தியுள்ள புருஷனுக்கு பிரம்மஞானத்தில் அதிகாரம் உண்டென்பதை காண்பிக்கிறவராய் முந்தின 8 - அத்தியாயங்களுக்கும் பிந்தி 9 - வது அத்தியாயத்திற்கும் உள்ள சம்பந்தத்தைச் சொல்லுகிருர்.

ச:—தான், இந்த ஜன்மத்தின் அல்லது முந்திய ஜன்மங்களின் புண்ணிய விசேஷத்தால் உண்டாகும் சாதனமான யஞ்ஞாதி கர்மங்களிலும், அவைகளால் சாத்தியமான ஸ்வர்க்காதி பலன்களிலும் விரக்தி உண்டாகி பிரத்தியகாத்மாவை (ஜீவ ஸ்வரூபத்தை) அறியவேண்டுமென்கிற இச்சை உண்டாகிறது. இந்த பிரத்தியகாத்ம ஸ்வரூபத்தை கேநேஷிதம் முதலான கேள்வி மறுமொழிரூபமாயிருக்கிற சுருதி காண்பிவிக்கிறது. கடோபநிஷத்தில் 14 சொல்லியிருக்கிறதாவது:—

पराञ्चिखानिव्यतृण त्स्वयम्भू
स्तस्मात्पराङ्पश्याति नान्तरात्मन् ।
कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्ष
दावृत्तचक्षुरमतत्वामिच्छन् ॥ (कठ 2-4-1

பராஞ்சிகாநிவ்யத்ருணஸ்ஸ்வயம்பூ:
ஸ்தஸ்மாத்பராங்பஶ்யதி நாந்தராத்மந் ।
கஶ்சித்தீர: ப்ரத்யகாத்மாநமைக்ஷ
தாவ்ருத்தசக்ஷுரம்ருதத்வமிச்சந் ॥ (க஠ 2-4-1.)

(அர்த்தம்:—ஈசுவரன் கண் முதலிய இந்திரியங்களை வெளியிலுள்ள பதார்த்தங்களைப் பார்க்கும் தன்மை யுள்ளவைகளாகவே செய்தார். ஆனதால் சாதாரணமாய் மனிதன் அநாத்மாவான பாஹ்ய விஷயங்களையே கவனிக்கிறானே தவிர பிரத்தியகாத்மாவைப் பார்க்கிறதில்லை. எவனாவது ஒருவன் தைரியமுள்ளவனாக இருந்தால், அவன் பாஹ்ய விஷயங்களைக் கவனிக்காமல் அவைகளில் வைராக்கியத்தை அடைந்து மோக்ஷத்தில் ஆசையால் பிரத்தியகாத்மாவைப் பார்க்கிறான்) மேலும் முண்டகோபநிஷத்தில் சொல்லியிருக்கிறதாவது:—

(அர்த்தம்:—ஆத்மஞானி சோகத்தைத் தாண்டிவிடுகிறான்.)

---

து:—தத்தால் குறிப்பிடப்பட்ட விஷ்ணுவே. எழுத்துகளைக்கூட்டி திருஷ்டுப் முதலிய சந்தஸ்களை அறியவேண்டியது.

சிவன் சகலத்தையும் அறிந்திருந்தாலும், விசேஷ ஞானத்தின் பொருட்டு, அல்லது, அறிந்ததையே திடப்படுத்தும்பொருட்டு, அல்லது, லோகானுக் கிரகத்தின் பொருட்டு, சகல இந்திரியங்களையும் பிரேரணை செய்கிறவனைப்பற்றி பிரம்மாவை கேட்கிறார்.

---

14. கர்மபலத்தில் விரக்தி அடைந்தவனுக்கு பிரம்ம ஞானத்தில் இச்சையுண்டாகிறது என்பதைச் சொல்லும் வேறு வசனத்தை நிரூபிக்கிறார்.

परीक्ष्यलोकान् कर्मचितान्ब्राह्मणो
निर्वेदमायान्नास्त्यकृतःकृतेन ।
तद्विज्ञानार्थंसगुरुमेवाभिगच्छेत्
समित्पाणिः श्रोत्रियंब्रह्मनिष्ठं (मु 1-2-12)

பரீக்ஷ்யலோகாந் கர்மசிதாந்ப்ராஹ்மணோ
நிர்வேதமாயாந்நாஸ்த்ய க்ருத:க்ருதேந
தத்விஜ்ஞாநார்த்தம் ஸகுருமேவாபிகச்சேத்
ஸமித்பாணி:ச்ரோத்ரியம்ப்ரஹ்மநிஷ்டம் (மு 1-2-12)

(அர்த்தம்:—நம்முடைய கர்மங்களாலுண்டான இந்த லோகத்திலுள்ள பதார்த்தங்களைப் பார்த்து, இப்படியே யஞ்ஞம் முதலிய கர்மங்களாலுண்டாகும் ஸ்வர்க்கம் முதலியவைகளும் நாசத்தை அடைந்துவிடும், நித்தியமாக இருக்கமாட்டா, இப்படி நிச்சயம் செய்து வைராக்கியத்தை அடைந்தவன், ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியதற்காக ஸமித்தைக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு பரம்பரையாக வேதம் தெரிந்தவனும் பிரம்ம ஞானமுள்ளவனுமாயு மிருக்கிற ஆசாரியனிடத்திற்குப் போகவேண்டியது.

மேற் சொல்லியபடி [15] வைராக்கியத்தை அடைந்தவனுக்குத் தான் பிரத்திய காத்மஞானமும், ஆத்மாவைப் பிரதிபாதனம் செய்யும் சாஸ்திரங்களைக் கேட்கவும், கேட்ட அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளவும், அதை யோசித்துப்பார்க்கவும், சாமர்த்தியம் ஜனிக்கும். அப்படியில்லாவிட்டால் அதிகார முண்டாகமாட்டாது. மேலும் இந்தப்பிரத்தியகாத்மாவே [16] பிரம்மம் என்கிற ஞானத்தால் சகல சம்சாரத்துக்கும் காரணமாயும் காமம் கர்மம் பிரவிர்த்தி இவைகளுக்குக் காரணமாயு மிருக்கிற அஞ்ஞானம் சம்பூரணமாய் நாசமாய்விடுகிறது. இதற்குச் சுருதிப்பிரமாணங்கள்:—

---

15. விரக்தனுக்கே பிரம்மத்தை அறியவேண்டு மென்கிற இச்சை உண்டாகிறது; அவிரக்தனுக்கு உண்டாகிறதில்லை என்று அன்வயவியதிரேகமாகச் சொல்லுகிறார்.

16. இதுவரையில் உபநிஷத்திற்கு கர்மகாண்டத்துட னிருக்கும் சம்பந்தம் சொல்லப்பட்டது. உபநிஷத்தால் யாதொரு பிரயோஜனமுமில்லை, ஆகையால் அதை வியாக்கியானம் செய்யவேண்டியது அனுவசியம் என்று சிலர் சங்கிக்கக்கூடும். அதை நிவிர்த்திக்கும் பொருட்டு உபநிஷத்தினின்றும் ஞானமாகிற பிரயோசன முண்டெனச் சொல்லுகிறார்.

ச:—(1) तत्रकोमोहः कः शोकः एकत्वमनुपश्यतः ॥ ईशा 7.

(1) 𑌤𑌤𑍍𑌰 𑌕𑍋𑌮𑍋𑌹𑌃। 𑌕𑌃𑌶𑍋𑌕𑌃 𑌏𑌕𑌤𑍍𑌵𑌮𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌃॥
𑌈𑌶𑌾 7

(ஆத்மா ஒன்று என்று பார்க்கிறவனுக்கு சோகமேதுமோஹமேது.)

(2) तरति शोकमात्मवित् ॥ छां 7-1-3.

(3) 𑌤𑌰𑌤𑌿 𑌶𑍋𑌕𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍 ॥ 𑌛𑌾𑌂 .

(3) भिद्यतेहृदयग्रन्थि छिद्यन्तेसर्वसंशयाः ।
क्षीयन्तेचास्यकर्माणि तस्मिन्दृष्टेपरावरे ॥

(3) 𑌭𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌹𑍃𑌦𑌯𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿 𑌛𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌶𑌯𑌾𑌃 ।
𑌕𑍍𑌷𑍀𑌯𑌨𑍍𑌤𑍇𑌚𑌾𑌸𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌤𑌸𑍍𑌮𑌿𑌂𑌦𑍍𑌰𑍃𑌷𑍍𑌟𑍇𑌪𑌰𑌾𑌵𑌰𑍇॥

(அர்த்தம் :—பிரம்மாதிகளைவிட மேலான அந்த பரமாத்மாவின் ஞானம்வந்தால் சகல சந்தேகங்களும் சகல கர்மங்களும் நசித்துவிடும், காமரூப ஹிருதயமுடிச்சி பேதித்துவிடும்) முதலியவை. (இப்படி சொல்லியிருப்பதால் ஆத்ம ஞானத்தால்தான் மோக்ஷம் கிடைக்கும் என்பது நிச்சயம்.)

**ஆக்ஷேபம்** :—கர்மசகித [17] ஞானத்தினின்றுங்கூட இந்த (சோகத்தைத் தாண்டுதல், சம்சார நிவிர்த்தியாகுதல் ஆகிய) பலன் சித்திக்குமே.

**உத்தரம்** :—அப்படி சித்திக்கமாட்டாது. ஏனெனின் [18], வாஜஸனேய (பிரஹதாரணியக) சுருதியில் அந்த கர்மசகித ஞானத்திற்கு (உபாசனைக்கு) வேறுபலன் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, ज्यायामेस्यात् (I-4-17) ஜாயாமேஸ்யாத் எனக்கு பத்தினி இருக்கவேண்டும், இப்படி பிரஸ்தாபம் ஆரம்பித்து पुत्रेणायं लोको जय्यो

---

17. அத்தியயன விதியில் கர்மகாண்டமும் ஞானகாண்டமும் சேர்ந்திருப்பதால் இரண்டிற்கும் பலன் ஒன்றென நினைப்பது யுக்தமே.

ஆகவே கர்மசகித ஞானத்தால் மூலகாரணத்துடன் சம்சாரம் நிவிர்த்தியாகிற பலன் சித்திக்கும். ஆகையால் சர்மத்தில் விரக்தி அடைந்தவனுக்குத்தான் உபநிஷத்தில் அதிகாரம் உண்டாகிறது என்பது கூடாதென்பது சங்கை.

18. கர்மகாண்டம் அத்தியயனவிதியில் சேர்ந்திருப்பதினால் மட்டும் கர்மகாண்டத்தின் பலன் மோக்ஷம் என்று சொல்லுவது யுக்தமன்று. அப்படிச்சொன்னால் கர்மகாண்டத்திற்கு வேறு பலன் என்று சொல்லிய சுருதி வசனம் விருத்தப்படும் என்று சொல்லுகிறார்.

नान्येन कर्मणाकर्मणा पितृलोको विद्यया देवलोकः(I-5-16) புத்ரேணாயஂ லொகொஜய்யொ நாந்யெந கமணா । கமணாபித்ருலொகொ விழ்யாதெவலொகஃ ॥ அதாவது இந்த மனுஷ்யலோகம் புத்திரனால் சாத்தியம், வேறு கர்மத்தால் சாத்தியமல்ல ; கர்மத்தால் சாத்தியமானது பிதர்லோகம், உபாசனையால் சாத்தியமானது தேவலோகம். இப்படிப்பிரஜாகர்மசகித ஞானமானது ஆத்மாவுக்கு அந்நியமான மூன்று லோகங்களுக்குச் சாதனமா யிருக்கிறதென்று சுருதி சொல்லுகிறது.

மேலும்[19] அவ்விடத்தி (பிரஹதாரணியக சுருதியி) லேயே சன்னியாசவிதிக்கு ஹேது சொல்லியிருக்கிறது. அதெப்படியெனின் किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोकः கிஂப்ரஜயா கரிஷ்யாமொ யெஷாஂ நொऽயமாத்மாऽயஂலொகஃ । (4-4-22) அதாவது ஆத்மஸ்வரூப லோகத்தையுடைய நாம் பிரஜைகளால்[20] என்ன செய்யப்போகிறோம். இந்த இடத்தில் இந்த ஹேதுவுக்கு அர்த்தமென்னவெனில் :—பிரஜை (புத்திரன்) கர்மம், அத்துடன் கூடின வித்தை (ஞானம், உபாசனை) இவைகள் முறையே மனுஷ்ய லோகம், பிதிர்லோகம், தேவலோகம் இம்மூன்று லோகங்களுக்கும் சாதனங்களா யிருக்கின்றன ; இவைகள் ஆத்மலோக பிராப்திக்குச்சாதனங்களல்ல. அவைகளால் எங்களுக்கு ஆகவேண்டியது என்ன[21] நித்தியமான ஆத்மாவில் ஆசக்தியுள்ள எங்களுக்கு[22] அநித்தியமான மூன்று லோகங்களை மேற்சொன்ன சாதகங்களால் சாதிக்க இஷ்டமில்லை. ஏனெனின் இயல்பாய்ச் சித்தித்துள்ளதும், ஜன்மம், ஜரை, மிருத்யு, பயம், இவைகளின்றியிலும், கர்மத்தால் விர்த்தியா

---

19. கர்மசகித ஞானத்தை சுருதி சொல்லுகிறதா யிருந்தால் சன்னியாசவிதியை சுருதி உபதேசிக்காமலிருக்கலாம். ஆனால் இந்த உபதேசம் செய்திருப்பதால் சுருதியின் கருத்து சமுச்சயமல்ல என்பதைச் சொல்லுகிறார்.

20. இந்தபதம் உபலக்ஷணம். இதனால்கர்மம் உபாசனை இவைகளையும் சேர்த்து அறியவேண்டியது.

21. எங்களுக்கு அவைகளால் ஆகவேண்டியது யாதொன்றுமில்லை. ஏனெனின் நாம் கேவலம் ஆத்மாவை அடையத்தான் இச்சிக்கிறோம்.

22. புத்திரன் கர்மம் உபாசனை இவைகளின் பலன்களை அனுபவித்தபின், இவைகளினின்றே மோக்ஷம் சம்பவிக்குமானதால் இவைகளை எப்படி நீங்கள் அனுதரிக்கலாம என்று ஒருவன் சங்கிப்பானே யாகில் அதற்கு உத்தரம் சொல்லுகிறார்.

ச:—காமலும், குறையாமலுமிருக்கிற [23] நித்தியமான லோகமாகிய ஆத்மாவே எங்களுக்கு இஷ்டம். இந்த ஆத்மலோகமோ நித்தியமாயிருப்பதால் அவித்தியா நிவிர்த்தியன்றியில் வேறு சாதனங்களால் உண்டாகும்படியாக [24] இல்லை. ஆகவே பிரத்தியகாத்மா என்னும் பிரம்மத்தின் நிச்சயத்தை [25] மனதில் தரித்து சகல [26] இச்சைகளையும் தியாகம் செய்யவேண்டும்.

மேலும் கர்மத்துக்கும் பிரத்திய காத்மபிர்ம்ம ஞானத்திற்கும் சேர்க்கை மிகவும் விருத்தம். ஏனெனின் கர்மமானது கர்த்தா கரணம், பலன், முதலிய பேதங்களை [27] அபேக்ஷிக்கிறது. பிரத்தி

23. சிலர் சங்கிக்கலாம்:—உங்களுக்கு ஆத்மலோகம் (மோக்ஷம்) வேண்டியது நிஜம்தான். ஆனால் கர்மத்தை செய்தா லொழிய அது கிடைக்கமாட்டாது. ஏனெனின் மோக்ஷமும் ஒருவிதபலனே. வேளாண்மை போன்ற கர்மத்தைச் செய்து எப்படித்தானிய முதலிய பலன்களை உத்பத்தியாக்க வேண்டுமோ அப்படி மோக்ஷமும் கர்மத்தைச் செய்தே சம்பாதிக்கத்தக்கது. இப்படி நினைக்காமல் பிராணிகளை ஸ்வபாவமாகவே முக்தர்களாயிருப்பதாக நினைத்தால் பத்தாவஸ்தை மோக்ஷம் இவைகளுக்கும் பேதம்யாதொன்று மிராது. எல்லாரும் பத்தர்கள் அல்லது முக்தர்கள் என்று சொல்லும்படி நேரிடும். இந்த சங்கையை நிவிர்த்திக்கும் பொருட்டு எழுதுகிறார்.

24. கர்மத்தில் எப்படி புரோடாசம் முதலியவைகள் உண்டாகின்றனவோ அப்படி மோக்ஷத்தில் யாதொன்று மில்லை. நல்ல ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கி மோக்ஷரூபபலன் சித்திக்கிறது. மோக்ஷம் யாதொரு கர்மத்தினுடையவும் காரியமாயில்லை.

25. பரோக்ஷஞான முண்டானபின் அபரோக்ஷஞான முண்டாகும் வரையில் அதின் (பரோக்ஷத்தின்) சித்தியின் பொருட்டு சன்னியாசத்தை அனுசரிக்கவேண்டும். பிரம்மாத்மஞானம் அனுபவத்தில் சித்தித்தால் சன்னியாசம் சுபாவமாகவே கிடைக்கிறது. பிரயத்தின பூர்வமாக அப்பியசிக்க வேண்டியதில்லை. முதலாவது விவிதிஷா சன்னியாசம், இரண்டாவது வித்வத் சன்னியாசம்.

26. புத்திரன் விஷயமான இச்சை, திரவிய விஷயமான இச்சை, உத்தமலோக விஷயமான இச்சை ஆக இம்மூன்றும் ஈஷணாத்திரயம் எனப்படும்.

27. கர்மவிஷயத்தில் பேதங்கள் நிறைந்திருக்கின்றன. யஜமானன் வேறு; கர்ம சாதனங்கள் வேறு. சங்கற்பம் வேறு; ஸ்தானங்கள் வேறு கிடைக்கக்கூடிய பலன்கள் வேறு; ஆகவே எங்கும் பேதமே விசேஷமாயிருக்கிறது.

யகாத்ம ஞானத்திலோ சகல பேதங்களும் அற்றுப்போயிருக்கின்றன. ஆகவே கர்மமும் பிர்ம்ம ஞானமும் ஒரே இடத்தில் சேர்ந்திருத்தலாகிய சமுச்சயம் ஒருகாலும் சம்பவிக்கமாட்டாது. ஏனெனின், பிர்ம்மஞானம் முக்கியத்தன்மையால் வஸ்துவாதீனமாய் புருஷனது ஆதீனமாகாமையால் ஞானகர்மங்களுக்கு ஸமுச்சயம் பொருந்தாது. [28] ஆதலால் [29] திருஷ்டம் அதாவது இந்த லோகசம்பந்தமாயும், அதிர்ஷ்டம் அதாவது பரலோக சம்பந்தமாயுமிருக்கிற பாஹ்ய சாதனங்கள் எந்த பலன்களைக் கொடுக்குமோ, அந்த பலன்களில் விரக்தி அடைந்த புருஷனுக்கு பிர்ம்மமே ஜீவன் என்னும் ஞானத்தை இந்த கேனோபநிஷத்து காண்பிக்கிறது. இந்த உபநிஷத்தில் சிஷ்யன், குரு, இவர்களுடைய கேள்வி உத்தரம் இந்த ரூபமாக விஷயம்பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. இதற்குக்காரணம் இதிற் சொல்லப்போகிற விஷயம் சூக்ஷ்மமாயிருப்பதால் சுலபமாய் அறியப்படவேண்டும் என்பதாம். மேலும் இதனால் இந்த விஷயம் கேவலதர்க்கத்தால் அறியப்பட மாட்டாது என்பதும் காட்டப்பட்டதாக ஆகிறது. இதற்குப் பிரமாணம் :—

(1) नैषातर्केणमतिरापनेया ॥

நைஷாதர்க்கேணமதிராபநேயா ॥

க...1-2-9. (அர்த்தம் :—ஆத்மஞானம் கேவலதர்க்கத்தால் அடையப்பட மாட்டாது.)

(2) आचार्यवान्पुरुषोवेद ॥

ஆசார்யவாந் புருஷோவேத ॥

(அர்த்தம் :—ஆசாரியனை அடைந்த புருஷனே ஆத்மாவை அறிவான்) மேலும்

(3) आचार्याद्धैवविद्या विदिता साधिष्ठं प्रापत् ॥ छा 4-9-3 ॥

ஆசார்யாத்தைவ வித்யா விதிதா ஸாதிஷ்டம் ப்ராபத் ॥

சா...(4-9-3.) அர்த்தம் :—குருவினிடமிருந்து அடையப்பட்ட வித்தை உத்தமபலத்தைக் கொடுக்கிறது.) மேலும்

---

28. விதியின்பேரில் ஒரு பிரயத்தினம் உண்டாகி அதினால் ஒருவஸ்துவுண்டாகுமானால் அது விதிவிஷயம் என்று சொல்லப்படும். ஞானம் என்பது விதியின்படி ஏற்படும் பிரயத்தினத்தைப் பொருத்திருக்கவில்லை. ஆகையால் அது விதிவிஷயமன்று. ஏனெனில் அது சித்தமாகவே இருக்கிறது. புருஷனால் புதிதாய்த் தயார்செய்யத்தக்கதாயில்லை.

29. பிரத்தியகாத்மாவே பிரம்மம் என்னும் நிச்சயத்வத விஷயமாயுடைய பரோக்ஷ அல்லது அபரோக்ஷ ஞானத்துக்கு சமுச்சய முண்டாகாதபடியால்

ச:— (4) तद्विद्धिप्रणिपातेन ॥

தத்3வித்3தி4ப்ரணிபாதேந ॥

கீதை 4 - 34. (அர்த்தம் :—குருவைச் சரணமடைந்து நமஸ்கரித்து வித்தையை சம்பாதிக்கவேண்டியது) இப்படி சுருதி ஸ்மிருதிகள் நியமங்களை ஏற்படுத்தி யிருக்கின்றன. (ஆகையால் குருவினிட மிருந்துதான் ஞானத்தைச் சம்பாதிக்கவேண்டும்.) பிரம்ம நிஷ்டனை குருவை சாஸ்திரத்திற் சொல்லிய விதிப்படி அடைந்து பிரத்தியகாத்மாவைத் தவிர மற்ற விடங்களில் சரணமடையாமல், (அதாவது ஆத்மஞானந் தவிர வேறு ஒன்றும் பிரயோசனப்படமாட்டாதென்று நினைத்து,) பயமின்றியிலும், நித்தியமாயும், அசைவில்லாததாயும், மங்கள ரூபமாயு மிருக்கிற ஸ்வரூபத்தில் ஆசைகொண்டு, சிஷ்யன் கேட்கிறான் என்பதாய், கேள்வி ரூபமாயிருக்கிற முதல் மந்திரத்தால் நினைக்கவேண்டியதாக இருக்கிறது. (சங்கர அவதாரிகை முற்றிற்று.

**केन ... मन:** —கேந.. மந: எந்த கர்த்தாவால் இச்சிக்கப்பட்டதாயும் (உத்தேசிக்கப் பட்டதாயும்) பிரேரணை செய்யப்பட்டதாயும் (அனுப்பப்பட்டதாயும்) மனது தன்னுடைய விஷயங்களை அடைகிறது.

---

வி :—**मन:** மந: = மனது

**केन (वा ) प्रेषितं** கேந (வா) ப்ரேஷிதம் = எவனால் ஏவப்பட்டதாய்

**इषितं** இஷிதம் = **इष्ट** இஷ்டம் = தன் இஷ்ட விஷயத்தில்

**पतति** பததி = பிரவிர்த்திக்கிறது என்று கருத்து

---

**इषितं** இஷிதம் = நல்லதாயினும் கெட்டதாயினும் இஷ்டமான விஷயத்தில், அதாவது, விஷயத்தைக் குறித்து **मन:** மந: = மனது **केन** கேந= எந்ததேவதையால் **प्रेषितं** ப்ரேஷிதம் பிரேரணை செய்யப்பட்டதாய்,**पतति** பததி=போகிறது.மனதானது ஸ்வயமாய் போகமாட்டாது; கரணமாய் (இந்திரியமாய்) இருப்பதால் எவனாலாவது பிரேரணை செய்யப்படுகிறதாகச் சொல்லப்படவேண்டியது. ஜீவனால் மனது பிரேரணை செய்யப்படுவதாய் சொல்லக்கூடாது. ஏனெனில் ஜீவனால் தடுக்கப்பட்டாலும் மனது விஷயங்களைக் குறித்துச் செல்லுகிறது. மனது ஜீவனுடைய சுவாதீனத்திலில்லை. ஆகையால் பலமான (ஸ்வதந்திரனை) தேவதையால் மனது பிரேரணை செய்யப்படுவதாகச் சொல்லவேண்டும். அந்த தேவதை யார் என்பது கேள்வியின் கருத்து. இப்படியே பின்வரும் வாக்கியங்களிலும் அறியவேண்டியது.

ச:—इषितं ஐஷிதம் :—இஷ் என்னும் பகுதிக்கு (1) மறுபடி மறுபடி திரும்புதல், (2) போகுதல், (3) இச்சை, என மூன்று அர்த்தங்களிருந்தாலும், இவ்விடத்தில் இச்சை என்கிற அர்த்தத்தைத்தான் கிரகிக்க வேண்டியது. மறுபடி மறுபடி என்கிற அர்த்தமும் போகுதல் என்கிற அர்த்தமும் பிரகிருத சந்தர்ப்பத்தால் அமையாமையால், மனதை பிரவர்த்திக்கும்படிச் செய்கிறவன் யார் என்பதை அறிகிற விஷயத்தில் "இச்சை" என்கிற அர்த்தத்தில் தான் இந்த வினைச்சொல் உபயோகிக்கப் பட்டிருக்கிறது.

एषितं ஏஷிதம் என்று இருக்க வேண்டியதை விட்டு इषितं ஐஷிதம் என்று உபயோகித்தது வேதத்தின் பிரயோகமே. இப்பதத்துடன் प्र ப்ர என்பதைச் சேர்ப்பதினால் प्रेषितं ப்ரேஷிதம் என்று பதம் உண்டாயிற்று. இதற்கு அர்த்தம் ஏவுதல், அனுப்புதல்.

इषितं — प्रेषितं — ஐஷிதம் - ப்ரேஷிதம் :—ப்ரேஷிதம் என்கிற பதத்தை மட்டும் உபயோகித்திருந்தால், அதாவது, மனது எவனால் ஏவப்பட்டு தன் விஷயத்தை அடைகிறது என்று மாத்திரம் (அதாவது இச்சிக்கப்பட்டதாய் என்கிற விசேஷண மில்லாமல் கேள்வியிருந்தால்) ஏவுகிறவன் யார்; எவ்விதமான ஏவுதல் (இச்சையினாலா, சரீரத்தாலா, வாக்கினாலா) என்கிற இரண்டு கேள்விகளுக்கு இடமுண்டாகிறது. इषितं ஐஷிதம் என்கிற விசேஷணத்தைச் சேர்ப்பதினால் இரண்டு கேள்விகளும் நிவிர்த்தியாகின்றன. எப்படி எனில், எவனுடைய கேவல 30 இச்சையால் ஏவப்பட்டு என்று சொன்னால், ஏவுதல் என்பது இச்சாரூபம் என்று சித்தித்து விசேஷ அர்த்தம் நிச்சயமாகிறது.

(இதின்பேரில் இரண்டு சங்கைகள்):—

(1) எவனால் கேவல இச்சையால் ஏவப்பட்டு என்பது சருத்தானல் केनेषितं கெநேஷிதம் என்பது போதுமானது, प्रेषितं ப்ரேஷிதம் என்பது அனாவசியம்.

(2) மேலும், அதிகவார்த்தைகளைச் சேர்த்திருப்பதால் அதிகமான அர்த்தம் விளங்கவேண்டும். ஆகையால், இச்சையாலும், கர்மத்தாலும், வாக்கினாலும் ஏவப்பட்டு என்று விசேஷமான 31 அர்

30. கேவல இச்சையினால் என்றால் கேவலசான்னித்தியத்தினால் அதாவது சன்னிதான விசேஷத்தால்

31. பதங்கள் வெவ்வேறாயிருப்பதாலும் ஒன்றுக்கொன்று பிரதிபதாதபடியாலும் விசேஷ அர்த்தத்தைக் கொள்வதே உசிதம்

ச:—த்தத்தைக் கொள்வது உசிதமாகும் (இந்த 2-பிரச்னங்களில் இரண்டாவதற்கு உத்தரம் முதலில் கொடுக்கப்படுகிறது.)

(2) இந்த கேள்வியினால் [32] கேட்கிறவன், கர்மத்தின் காரியமாயும் அனித்தியமாயு மிருக்கிற தேசம், இந்திரியங்கள், முதலியவைகளின் சேர்க்கையில் விரக்தி அடைந்து, நிர்விகாரமாயும் நித்தியமாயு மிருக்கிற வஸ்துவை தெரிந்து கொள்ளவேண்டும் என்கிற இச்சையுடன் கேட்டதாக நினைக்கவேண்டும். அப்படியில்லாவிடின், இச்சையினாலும், வாக்கினாலும், கர்மத்தினாலும் (அதாவது கைமுதலியவை அசைவது) ஏவுதல் செய்வது தேஹேந்திரியாதிகளுக்கு ஏற்பட்டிருக்கிறது என்பது ஸ்பஷ்டமாகத் தெரிந்திருப்பதால், விசாரித்து தெரிந்து கொள்ளவேண்டும் என்கிற ஆவசியம் ஒன்றுமில்லை, ஆகையால் கேள்வி வீணாகும்.

இப்படியே யிருக்கட்டும். प्रेषित ப்ரேஷிதம் என்கிறபதத்திற்கு அர்த்தம் சொல்லப்படவில்லையே யெனின் (முதலாவது கேள்விக்கு உத்தரம் சொல்லப்படுகிறது.)

(1) அப்படியல்ல. இந்தக்கேள்வி சம்சய மடைந்த மனிதனுடைய தாகையால் பிரேஷித சப்தத்திற்கு விசேஷ அர்த்தம் சொல்லப்படுகிறது. லோகத்தில் பிரசித்தமா யிருக்கிற காரியகாரண சமூகமே பிரேரணைசெய்கிறதா [33] ? அல்லது இந்த சமூகத்துக்கு வேறானதாயும் ஸ்வதந்திரமாயு மிருக்கிற யாதானுமோர் இச்சையால் மனது முதலியவைகளை பிரேரணை [34] செய்யப்படுகின்றனவா? இந்த அர்த்தத்தைக் காட்டும் பொருட்டு केनेषितं पताति प्रेषितमनः கேநேஷிதம் பததி ப்ரேஷிதம் மந: என்கிற இரண்டு விசேஷணங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

**ஆக்ஷேபம்** :—மனது ஒன்றின் பிரேரணையன்றியில் ஸ்வதந்திரமாக இருந்துகொண்டு தன்னுடைய விஷயத்தில் பிரவிர்த்திக்கிறது என்பது பிரசித்தம். ஆகவே இந்த கேள்வி எப்படிக்கூடும்?

---

32. ஈசெய்கிற இரண்டாவது (இச்சையினாலும், கர்மத்தாலும், வாக்கினாலும், ஏவப்பட்டு என்னும்) அர்த்தம் பொருந்தாது. ஏனெனின் இச்சை முதலியவைகளால் சரீரம் பிரவிர்த்திக்கிறதென்பது பிரசித்தமாக இருக்க பிரசினத்துக்கு இடமில்லை என்று சொல்லுகிறார்.

33. இதில் பிரேஷிதம் என்கிறபதத்தின் அர்த்தம் விளங்குகிறது.

34. இதில் இஷிதம் என்கிறபதத்தின் அர்த்தம் விளங்குகிறது.

ச:—உத்தரம் :—பிரவிர்த்தி நிவிர்த்தி விஷயங்களில் மனதிற்கு ஸ்வாதந்திரிய மிருக்குமானால், ஒருவனும் அனிஷ்டத்தை நினைக்க மாட்டான். ஆனால் அனுபவத்தில் அநர்த்தத்தை அறிந்திருந்தும் மனிதன் அதைச் சங்கற்பிக்கிறான். வெகு துக்ககரமான விஷயத்தில் தடுக்கப்பட்டாலும் மனது திரும்பியும் பிரவேசிக்கிறது. ஆகவே பிரவிர்த்திக்கிற விஷயத்திலும் பிரவிர்த்திக்காமலிருக்கிற விஷயத்திலும் மனதிற்கு ஸ்வாதந்திரியம் இல்லாதபடியால், யாரால் பிரவிர்த்திக்கும்படி மனது செய்யப்படுகிறது என்று கேள்வி கேட்டது உசிதந்தான்

**केन...युक्तः** கேந... யுக்த: எவனால் ஏவப்பட்டு பிராணன்[35] தன் வியாபாரத்தில் பிரவிர்த்திக்கிறது.

**प्रथम:** ப்ரத²ம: இந்த விசேஷணத்தைப் பிராணனுக்குக் கொடுக்கவேண்டிய காரண மென்னவெனின், சகல இந்திரியங்களும் பிராணனை முன்னிட்டுக்கொண்டு பிரவிர்த்திக்கின்றன. பிராணன்

---

வி :—**प्रथम:** ப்ரத²ம: = பிராணன்களுக்குள் சிரேஷ்டனான

**प्राण:** ப்ராண: = முக்கிய பிராணன்

**केन (वा) युक्तः** கேந (வா) யுக்த: = எவனால் ஏவப்பட்டவனாய்

**प्रैति** ப்ரைதி=விசேஷமாய்சஞ்சரிக்கிறான். அப்படியே

---

து :—முக்கியமான வாயுவே மனதை பிரேரணைசெய்கிறவனாய் இருக்கட்டுமே என்று சொல்லும்பக்ஷத்தில் **केनप्राण:** கேநப்ராண: என்பதினால் சொல்லுகிறார்.

**प्रथम:** ப்ரத²ம: = சகல ஜீவர்களிலும் உத்தமனான **प्राण:** ப்ராண: = முக்கிய பிராணன் (வாயு) **केन** கேந = எவனால் **युक्त:** யுக்த: = **नियुक्त:** நியுக்த: = பிரேரணை செய்யப்பட்டவனாய் **प्रैति** ப்ரைதி = போகிறான்; தன் வியாபாரத்தைச் செய்கிறான் என்று அர்த்தம். அவனும் பரதந்திரனா யிருப்பதால் மனதை பிரேரணை செய்யமாட்டான் என்பது கருத்து. முக்கிய பிராணன் ஜீவனால் பிரேரணை செய்யப்படுகிறான் என்று சொல்லக்கூடாது. ஏனெனின் அவன் சர்வ ஜீவோத்தமன். அவன் உமக்குச் சமா

---

35. பிராணன் கிரியாசக்திமான். சகல இந்திரியங்களின் சலனக் கிரியைகளும் பிராணசக்தியால் உண்டாகின்றன. விஷயங்களைப் பிரகாசிப்பிக்கிற சக்திமட்டும் இந்திரியங்களுடையது. அவைகளை அடைந்தன்றோ அவைகளைப் பிரகாசிப்பிக்கவேண்டும். அப்படி அடையச் செய்யும் சக்தி பிராணனுடையது.

ச:—முதலில் சென்றபிறகுதான் இந்திரியங்கள் பிரவிர்த்திக்க முடியும். ஆகையால் பிராணனுக்கு प्रथम: என்கிற விசேஷணம் கொடுக்கப்பட்டது.

**केन...वदन्ति** கேந ... வதந்தி:—சப்தரூபமான வாக்கை (வசனங்களை) எவனால் ஏவப்பட்டதாய் ஜனங்கள் வசனிக்கிறார்கள்

**चक्षुः... युनक्ति** சக்ஷுஃ...யுநக்தி அப்படியே நேத்திரம், காது

---

வி:—केन (वा) इषितां கேந (வா) இஷிதாம்=எவனால் ஏவப்பட்டு

इमां இமாம் = இந்த

वाचं வாசம் = வாக்கிந் திரியத்தை

(अवलंब्य அவலம்ப்ய = ஆசிரயித்துக்கொண்டு)

(लोका: லோகாஃ = ஜனங்கள்)

वदन्ति வதந்தி = வசனிக்கிறார்கள், வியவஹரிக்கிறார்கள். அப்படியே

चक्षुः श्रोत्रं சக்ஷுஃ ஶ்ரோத்ரம் = கண் காதுகளை

क उ देवः க உ தேவஃ = எந்த தேவதை

युनक्ति யுநக்தி = ஏவுகிறான். கண் காதுகளை பிரேரணை

---

து:—னமாயிருப்பதால் உம்மாலும் பிரேரணை செய்யப்படுகிறவனல்ல. இரமாதேவியாலும் பிரேரணை செய்யப்படுகிறவனல்ல. ஏனெனின் அவளும் ஸ்வதந்திரமல்ல. ஆகையால் முக்கிய பிராணனையே நான் கேட்கிறேன்.

इमां இமாம் = லௌகிகமாயும் வைதிகமாயுமிருக்கப்பட்ட, பிரமாண சித்தமான,

वाचं வாசம் = வசனங்களை

केन கேந = எந்த தேவனால்

इषितां இஷிதாம் = பிரேரணை செய்யப்பட்டவைகளாக

(विद्वांस: வித்வாம்ஸஃ = வித்வான்கள்)

वदन्ति வதந்தி = சொல்லுகிறார்கள். வாக்கை எவன் பிரேரணை செய்வதினால் ஜீவர்கள் பேசுகிறார்கள்.

उ உ = ஓ பிரம்மதேவனே

क: கஃ = எந்த

देव: தேவஃ தேவதை

चक्षुः சக்ஷுஃ = கண்ணையும்

श्रोत्रं ஶ்ரோத்ரம்=காதையும், இவைகளால் குறிப்பிடப்பட்ட சகல பாஹ்ய இந்திரியங்களையும்

युनक्ति யுநக்தி = பிரேரணை செய்கிறான்.

ச:—முதலியவைகளைத் தங்கள் தங்கள் விஷயங்களை அடையும் படி செய்கிறது எந்த தேவதை 36? ]

---

வி:—செய்கிறவன் எவன் என்பது கருத்து. அசேதனங்களான இவைகள் சேதனத்தால் ஏவப்படாமல் காரியத்தைச் செய்ய மாட்டாவாகையால், மேற்சொன்னவைகள் எவனால் ஏவப்பட்டு தங்களுடைய காரியங்களைச் செய்கின்றன வென்று குருவை சிஷ்யன்கேட்டான் என்று கருத்து. ||1||

---

து:—उ உ = என்பதற்கு

च வ = (மேலும்) என்று அர்த்தம் செய்து चक्षुः श्रोत्रं उ (चक्षुः श्रोत्रंच) வக்ஷுஃ ஶ்ரோத்ரம் உ (வக்ஷுஃ ஶ்ரோத்ரம் வ) "கண்ணையும் மேலும் காதையும் என்றும்வைத்துக்கொள்ளலாம். चक्षुः श्रोत्रच வக்ஷுஃ ஶ்ரோத்ரவ என்பதைவெவ்வேறு பதங்களாகவும் அல்லது ஒரே கூட்டுச்சொல்லாயும்பாவிக்கலாம் चक्षुःश्रोत्रं வக்ஷுஃ ஶ்ரோத்ரம் என்னும் பதங்களின் ஒருமைப்பிரயோகம் பிராணிகளின் அங்கபாவனையால் வியாகரணப்படி பொருந்தும்.

கண், வாக்கு, முதலியவைகள் பிரத்தியக்ஷமாய் ஜீவனுக்கு அதீனமாய்க் காணாதபடியால், ஸ்வாதந்திரியம் முதலிய இலக்ஷணங்களுடன்கூடின ஒரு தேவதையே பிரேரணை செய்கிறவனை (நியாமகனை)ச், சொல்லவேண்டும். அந்த தேவதையார் என்பதுகருத்து. மனது முதலியவைகளைப் பிரேரணை செய்கிறவன் நாராயணனால் அவன் இலக்ஷணம் என்ன? இவ்விடத்தில் மனது, வாக்கு, கண், காது, இந்த சப்தங்களால் அவைகளின் அபிமானி தேவதைகளை அறியவேண்டியது. ஆகையால்தான் முக்கிய பிராணனை பிரேரணை செய்யும் தேவதை யார் என்னும் கேள்வி பொருந்தும். கேவல இந்திரியங்களைப் பிரேரணை செய்கிறவன் யார் என்று கேள்வி யிருந்தால், இந்திரியமாகாத முக்கியபிராண பிரேரக விஷயமான கேள்வி பொருந்தாது. ஆகையால் அபிமானி தேவதைகளே அறியத்தக்கவர்கள். மேலும் கண் முதலிய பதங்கள் உபலக்ஷணங்களே. இதர இந்திரியங்களையும் பிரேரணை செய்கிறவனைப்பற்றி இந்த கேள்வி என்று அறியத்தக்கது.

---

36. இந்த மந்திரவாக்கியத்திற்குச் சமானமாய் கடோபநிஷத்து 6 வது வல்லி - 2. (यदिदंकिञ्चजगत्सर्वं प्राण एजतिनिः सृतं महद्भयं) யதிதம் கிஞ்சஜகத்ஸர்வம்ப்ராண ஏஜதி நிஃஸ்ருதம் மஹத்பயம் மந்திரங்களையும், தைத்ரீயம் ஆநந்தவல்லி 8 வது (भीषाऽस्माद्वातः पवते) பீஷாஸ்மாத்வாதஃ பவதே மந்திரத்தையும் பார்க்கலாம்.

2. श्रोत्रस्य श्रोत्रंमनसो मनोयद्वाचोह
वाचं स उ प्राणस्य प्राणश्चक्षुषः चक्षुः ।
अतिमुच्यधीराः प्रेत्या-
स्माल्लोकादमृताभवन्ति ॥ २ ॥

ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் மநஸோ மநோ யத்வாசோஹ
வாசம் ஸ உ ப்ராணஸ்ய ப்ராணஶ்சக்ஷுஷஶ்சக்ஷு꞉ ।
அதிமுச்யதீரா꞉ ப்ரேத்யா-
ஸ்மால்லோகாதம்ருதாபவந்தி ॥

यत् யத் = எக்காரணத்தால்

(सः ஸ꞉ = நீ எவன் விஷயமாய்க் கேள்வி கேட்டாயோ அந்த தேவதை)

श्रोत्रस्य ஶ்ரோத்ரஸ்ய = சப்தத்தைக் கேட்கச் சாதனமான சுரோத்திரேந்திரியத்திற்கு

श्रोत्रं ஶ்ரோத்ரம் = சுரோத்திரேந்திரியமா யிருக்கிறானோ அதாவது காதின் வியாபாரத்துக்கு நிமித்தனாயிருக்கிறானோ

यत् யத் = எக்காரணத்தால்

मनसः மநஸ꞉ = அந்தக்கரணத்திற்கு

मनः மந꞉ = அந்தக்கரணமா யிருக்கிறானோ

यत् யத் = எக்காரணத்தால்

वाचः வாச꞉ = வாக்குக்கு

ह ஹ = நிச்சயமாய்

वाचं வாசம் = வாக்காயிருக்கிறானோ

यत् யத் = எக்காரணத்தால்

सः ஸ꞉ = அந்த தேவதை

उ உ = நிச்சயமாய்

---

து:—இந்த உபநிஷதர்த்தத்துக்குப் பிரமாண வசனங்களை பாஷ்யகாரர் ब्रह्मसार ப்ரஹ்மஸார மென்கிற கிரந்தத்திலிருந்து எடுத்திருக்கிறார். முதல் மந்திரத்துக்குப் பிரமாண வசனம் யாதெனின் :—

यदिदंपुरुषावश्यं तत्रतत्रपतेन्मनः ॥
केनतत्प्रेरितं यातिप्राणः सर्वोत्तमस्तथा ॥
चक्षुःश्रोत्रं तथावाचं कोदेवोविनियोजयेत् ॥

யதிதம் புருஷாவஶ்யம் தத்ரதத்ரபதேந்மந꞉ ॥
கேநதத்ப்ரேரிதம் யாதிப்ராண꞉ ஸர்வோத்தமஸ்ததா ॥
சக்ஷு꞉ஶ்ரோத்ரம் ததாவாசம் கோதேவோவிநியோஜயேத்

ச:—प्राणस्य ப்ராணஸ்ய = பிராணனுக்கு
प्राणः ப்ராண: = பிராணனாயிருக்கிறானே
चक्षुषः சக்ஷுஷ: = கண்ணுக்கு
चक्षुः சக்ஷு: = கண்ணாயிருக்கிறானே
(तस्मात् தஸ்மாத் = அக்காரணத்தால்)
धीराः தீரா: = புத்திமான்கள்
(तत् தத் = அதை)
(ज्ञात्वा ஜ்ஞாத்வா = அறிந்து)
श्रोत्रादीन् ஶ்ரோத்ராதீந் = சுரோத்திர முதலியவைகளை
अतिमुच्य அதிமுச்ய = விட்டு
अस्मात् அஸ்மாத் = இந்த
लोकात् லோகாத் = லோகத்தினின்றும் அதாவது புத்திர மித்திர களத்திரர்களிடத்தினின்றும், அல்லது சரீரத்தினின்றும்
प्रेत्य ப்ரேத்ய = வெளிப்பட்டு,
अमृताः அம்ருதா: = மரணமில்லாதவர்களாக
भवन्ति பவந்தி = ஆகிறார்கள்.

இவ்விதமாகக் கேட்ட யோக்கியனான சிஷ்யனைக் குறித்து குரு உத்தரம் சொல்லுகிறார். ஓ சிஷ்யனே, எந்த தேவதை மன முதலிய இந்திரியங்களை அவையவைகளின் வியாபாரங்களிற் பிரவிர்த்திக்கும்படிச் செய்கிறான், எப்படி பிரேரணை செய்கிறான் என்று நீ கேள்வி கேட்டாயோ அதற்குப் பதில் சொல்லுகிறேன்

---

வி:—அ - கை:—குரு உத்தரம் சொல்லுகிறார்.

---

து:—சுருதியில் तस्मैसहोवाच தஸ்மைஸஹோவாச என்பது போலான வாக்கியங்களில்லாதபடியால், श्रोत्रस्यश्रोत्रं ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் முதலிய வாக்கியங்கள் பிரதி வசனங்கள் என்று காணப்படவில்லை. ஆகையால் இரண்டு சுருதிகளையும் சேர்க்கும் பொருட்டு பாஷ்யகாரர் சொல்லுகிறார் :—

इतिपृष्टस्तदा ब्रह्माप्राहदेवमुमापतिम् ॥
ध्यात्वानारायणंदेवं सर्वाधारमनूपमम् ॥
सर्वज्ञंसर्वशक्तिञ्च सर्वदोषविवर्जितम् ॥

இதிப்ருஷ்டஸ்ததா ப்ரஹ்மா ப்ராஹதேவமுமாபதிம் ॥
த்யாத்வா நாராயணம் தேவம் ஸர்வாதாரமநூபமம் ॥
ஸர்வஜ்ஞம் ஸர்வஶக்திஞ்ச ஸர்வதோஷவிவர்ஜிதம் ॥

இவ்விதமாக சிவனால் கேட்கப்பட்டவராய் பிர்ம்மா சொல்லுகிறார்.

ச:—கேள். श्रोत्रस्य श्रोत्रं [37] ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்[37] = சுரோத்திரம் என்றால் புருஷன் எதனால் சப்தத்தைக் கேட்கிறானோ அப்படிப் பட்ட சிரவண சாதகமான அதாவது சப்தத்தைப் பிரகாசிப்பிக்கிற காது என்கிற இந்திரியம். "எந்த தேவதை கண்ணையும் காதையும் ஏவுகிறான்" என்று கேட்டாயோ அந்த தேவதை காதுக்குக் காதா யிருக்கிறான்.

ஆக்ஷேபம்:—இன்ன [38] தேவதை சுரோத்திரம் முதலியவை களை அவையவைகளின் விஷயங்களிற் பிரவேசிக்கும்படிச் செய் கிறான் என்று குறிப்பிட்டுச் சொல்லவேண்டியதை விட்டு, அந்தத் தேவதை காதுக்குக் காது என்று சொன்னது கேட்ட கேள்விக் குச் சரியான மறுமொழியல்ல.

உத்தரம்:—இப்படி உத்தரம் கொடுத்ததிற் தோஷமில்லை. இப் படிச் சொல்லாவிட்டால் அந்த தேவதையின் விசேஷ ஸ்வரூ பத்தை அறியமுடியாது. ஆகையால் இப்படி உத்தரம் கொடுக் கப்பட்டது. கோடாலி முதலிய ஆயுதங்களின் செய்கைகளன்றி யில் தன்னுடைய சொந்தமான செய்கையால் அந்த ஆயுதங்கள் வெட்டுதல் முதலிய செய்கைகளைச் செய்யும்படி ஒருவன் எப்படி செய்கிறானோ, அப்படி காது முதலிய இந்திரியங்களின் வியா பாரங்களைவிட்டு அவைகளுக்கு அன்னியமான தன் சொந்த வியாபாரத்துடன் ஒரு தேவதை கூடி இந்திரியங்களை அவையவை களின் விஷயங்களிற் பிரவேசிக்கும்படிச் செய்தால், நீ கேட்ட கேள்விக்கு ஒத்ததாக இந்த உத்தரம் இருக்கமாட்டாது. ஆனால் சுரோத்திராதிகளின் வியாபாரங்களுடன் சம்பந்தப்படாமல் தன் னுடைய சொந்த செய்கையுடன் கூடினவனாயும் அந்த இந்திரியங் களைப் பிரேரணை செய்வதாயும் யாதொரு தேவதையும் கோடாலி யால் வெட்டுகிறவன்போல் காணப்படவில்லை. ஆனால் சுரோத்

---

37. இதற்கு சமான அர்த்தம் प्राणस्य प्राणमुतचक्षुषः चक्षुरुत श्रोत्रस्य श्रोत्रं मनसो येमनोविदुः ப்ராணஸ்ய ப்ராணமுதசக்ஷுஷ: சக்ஷுருத ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் மநஸோ யேமநோவிது: என்னும் பூ வு 4 - 4 - 18 ல் காணப்படுகிறது.

38. கேட்ட கேள்விக்குச் சரியான பிரதிவசனமில்லை என்பதாய் ஆக்ஷேபம்.

39. வீடு முதலியவைகள் போல் சுரோத்திரம் முதலியவைகள் ஒரு இடத்தில் கூடியிருப்பதால் தங்களைவிட வேறான ஒன்றைச் சேர்ந்தவையாய் இருக்கின்றன. அதுவும் ஒரு சங்காதமாயிருந்தால் கிரகாதிகள் போல் ஜட

ச:—திராதி 39 இந்திரியங்கள் ஒரு இடத்தில் கூடி பார்த்தல், சங்கற்பித்தல், நிச்சயித்தல், முதலிய வியாபாரங்களைச் செய்வதினாலும், அவைகளின் பலோற்பத்தியா 40 லறியவேண்டிய அந்த வியாபாரங்களாலும் அவைகளைப் பிரேரணை செய்கிறவன் ஒருவன் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. எப்படி தூண், சுவர், வாசல், ஜன்னல் முதலியவைகளின் சமூகமான அசேதன ரூபவீடு முதலியவைகள் சேதனனான ஒருவனுடைய உபயோகத்திற்காகவே ஏற்பட்டிருக்கின்றனவோ அப்படி சுரோத்திராதி இந்திரியங்களின் சேர்க்கை ஒருவனுடைய உபயோகத்திற்காகவே இருக்கவேண்டும். ஆகையால் "காதுக்குக் காது" என்று மறுமொழி கொடுத்தது உசிதந்தான்.

ஆக்ஷேபம்:—காதுக்குக் காது என்பதினால் என்ன அர்த்தம் விளங்குகிறது. விஷயங்களைப் பிரகாசிப்பிக்கும் தீபத்திற்கு வேறு தீபத்தால் பிரயோஜன மில்லாததுபோல் காதுகு வேறு காதினால் பிரயோஜனமில்லை.

உத்தரம்:—இதில் யாதொரு தோஷமுமில்லை. அர்த்தத்தை அடியில் வருமாறு செய்யவேண்டியது:—சப்தமாகிற விஷயத்தை கிரஹிப்பதில் சுரோத்திரேந்திரியத்தின் சாமர்த்தியம் காணப்படுகிறது. இந்த சாமர்த்தியம் சைதன்னியமாயும் காது முதலியவைகள்போல் சேர்க்கையன்றியிலும், நித்தியமாயும், எங்கும் வியாபகமாயு மிருக்கிற ஆத்மதேஜஸ் ஒன்று இருந்தால் தான் காணப்படுகிறது ; இல்லாவிட்டால் காணப்படுகிறதில்லை. ஆகையால் காதுக்

---

மாக வேண்டும். அப்போது அதற்கு வேறு ஆதாரத்தைக் கற்பிக்க வேண்டும். அதுவும் முந்தினது போல் சேர்க்கையுள்ள வஸ்துவாயிருந்தால் அதற்கும் ஆதாரம் கற்பிக்க வேண்டும். அப்போது அனவஸ்தா (வரம்பின்மை) தோஷம் சம்பவிக்கும். ஆகையால் அது சுரோத்திராதிகளைப் போல் சங்காதமாயில்லாத சேதனமாயிருக்க வேண்டும். ஆகையால் சர்வ சாக்ஷியாயிருக்கப்பட்டதை லக்ஷியத்தில் கொண்டுவரும்பொருட்டு " காதுக்கு காது" என்னும் முதலிய உத்தரவசனங்கள் யுக்தமே.

40. பலோற்பத்தியால் இந்திரிய வியாபாரம் தெரிய வருகிறது. கடம் பார்க்கப்பட்டது என்கிற பலத்தால் நேத்திரேந்திரியம் பிரவிர்த்தித்திருக்கிறது என்று தெரிய வருகிறது. ஆகையால் இந்திரிய வியாபாரத்துக்கு பலத்தை கொடுத்தல் என்கிற விசேஷணம் பொருந்தும். இந்தவியாபாரத்தால் அதின் ஆசிரியம் (இந்திரிய ஆசிரய சேதனம்) தெரிய வருகிறது.

ச:—குக் காது என்றுசொன்னது சரியானதுதான். இவ்விஷயத்தில் சுருதி முதலிய பிரமாணங்களுமிருக்கின்றன:—

(1) आत्मनैवायं ज्योतिषाऽऽस्ते ॥ बृह 4-3-6 ॥
ஆத்மநைவாயம் ஜ்யோதிஷாऽऽஸ்தே ॥ ப்ருஹ IV 3-6

அர்த்தம்:—ஆத்ம ஸ்வரூபமான ஜோதியால்தான் உட்காருதல் முதலிய வியவஹாரம் சம்பவிக்கிறது.

(2) तस्यभासा सर्वमिदं विभाति ॥ श्वेता 6-14 ॥
தஸ்யபாஸா ஸர்வமிதம் விபாதி ॥ ச்வேதா 6-14.

அர்த்தம்:—பரமாத்ம ஸ்வரூபப் பிரகாசத்தால்தான் இது எல்லாம் பிரகாசிக்கிறது.

(3) येन सूर्यस्तपति तेजसेद्धः ॥ तै - ब्रा - 3-12-9-7 ॥
யேந ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த: ॥ தை ப்ரா

அர்த்தம்:—சைதன்னிய ஜோதிஸின் சேர்க்கையால் ஜ்வலிக்கும் சூரியன் பிரகாசிக்கிறான்.)

(4) यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम्॥ गीता 15-12 ॥
யதாதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதேऽகிலம் ॥ கீதா॥ 15-12

(அர்த்தம்:—சூரியனிடத்திலிருந்துகொண்டு எந்த தேஜஸ் சகல பிரபஞ்சத்தையும் பிரகாசிப்பிக்கிறதோ அந்த தேஜஸ் என்னுடையதுதான்.)

(5) क्षेत्रंक्षेत्रीतथाकृत्स्नं प्रकाशयतिभारत ॥ गीता 13-33 ॥
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாசயதி பாரத ॥ கீதா॥ 13-33

சூரியன் சகல ஜகத்தையும் பிரகாசிப்பிக்கிறதுபோல் ஒரே பரமாத்மா சகல க்ஷேத்திரத்தையும் (சரீரத்தையும்) பிரகாசிப்பிக்கிறான்.

(6) नित्योऽनित्यानां चेतनश्चेतनानाम् ॥ कट 2-13 ॥
நித்யோऽநித்யாநாம் சேதநச்சேதநாநாம் ॥ கட 2-13

(அர்த்தம்:—பரமாத்மா அநித்திய பதார்த்தங்களுக்கு நித்தியமான லயஸ்தானம்; பிரம்மாதி சேதனங்களுக்கு எல்லாம் சேதனம்). சுரோத்திராதிகளே எல்லாவற்றிற்கும் ஆத்மா, சேதனம், (அதாவது தாங்களே விஷயங்களிற் பிரவிர்த்திக்கின்றன) இப்படி லோகத்திற் பிரசித்தமாயிருப்பது இந்த வசனத்தால் நிராகரிக்க (தள்ள)ப் படுகிறது. (சுரோத்திரத்திற்குச் சுரோத்திரம் என்று சொன்ன மறுமொழிக்குச் சுருக்கமான தாற்பரியம் என்னவெனில்:—)சகலமான இந்திரியங்கள், சரீரம், முதலியவைகளுக்கு விலக்ஷணமாயும், எல்லாவற்றிற்கும் உள்ளே யிருப்பதாயும், விகார

ச:—மற்றதாயும், ஜரை (கிழத்தன்மை) மரணம், பயம் இவைகளில்லாததாயும், உற்பத்தி யற்றதாயும், சுரோத்திராதிகளுக்குச் சுரோத்திராதியாயும், அதாவது, சுரோத்திராதிகளுக்கு தங்கள் தங்கள் வியாபாரங்களைச் செய்யும் சாமர்த்திய மிருக்க நிமித்தியமாயுமிருக்கிற ஒருவஸ்து (ஆத்மதேஜஸ்) புத்திமான்களுடைய புத்தியில் படும்படி இருக்கிறது. இந்தப்படி உத்தரமும் பதங்களின் அர்த்தமும் [41] அமைந்திருக்கின்றன.

मनस:मनः மநஸ: மந: = அப்படியே (நீ எதைக் குறித்து கேள்வி கேட்டாயோ) அது அந்தக் கரணத்துக்கு மனதா யிருக்கிறது. சேதனத்தால் ஏற்படும் பிரகாசமன்றியில் அந்தக்கரணம் தன் செய்கைகளாகிய சங்கற்பம் (நினைப்பு) நிச்சயம் இவைகளைச்செய்ய மாட்டாது. ஆகையால் அது மனதிற்கும் மனதாக இருக்கிறது. இவ்விடத்தில் மனது [42] என்பதில் புத்தி மனது இரண்டும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

---

வி:—श्रोत्रस्य...चक्षुः ஶ்ரோத்ரஸ்ய...சக்ஷு: எது கண்முதலானவைகளுக்கும் பிரகாசத்தை உண்டுபண்ணுகிறதோ, எது கண்முதலியவைகளன்றியில் பிரகாசத்தோடு கூடியிருக்கிறதோ (கண் முதலிய இந்திரியங்களன்றியில் சகலத்தையும் அறிகிறதாய் எது இருக்கிறதோ.)

---

து:—यत् = யத் यः = எவன்

श्रोत्रस्य ஶ்ரோத்ரஸ்ய = சுரோத்திரேந்திரியத்துக்கு (காதுக்கு)

श्रोत्रं ஶ்ரோத்ரம் = சிரவண (கேட்கும்) சக்தியைக் கொடுக்கிறானோ

मनसः மநஸ: = மனதாகிற இந்திரியத்திற்கு

मनः மந: = மனனம் செய்யும் சக்தியைக் கொடுக்கிறானோ.

वाचः வாச: = வாக்கிந்திரியத்திற்கு

वाचं வாசம் = வார்த்தையை உச்சரிக்கும் சக்தியைக் கொடுக்கிறானோ.

---

41. ஆத்மா சுரோத்திராதிகளுக்கும்சுரோத்திராதி ரூபமாயிருப்பதால் சுரோத்திராதிகளிடத்தில் ஆத்ம புத்தியை விடவேண்டியது. இந்த அர்த்தம் சுருதியில் பிரத்தியக்ஷமாய் சொல்லப் பட்டிராவிடினும் அறியத்தக்கது

42. இவ்விடத்தில் பாஹிய இந்திரியங்களை உத்தேசித்து கேவலம் அந்தரிந்திரியமாக மட்டும் மனதை அறியக்கூடாது. ஆனால் புத்தியும் மனதும் இரண்டும் இதில் சேர்ந்திருப்பதாக அறிய வேண்டியது.

ச :—यत् वाच: हवाचं :—யத் வாச: ஹவாசம் यत् யத் = எந்தக் காரணத்தால் சுரோத்திரம் முதலிய சகல பதங்களுடன் இந்த यत् யத்-பதம் यत् श्रोत्रस्य, यत् मनस: யத் ச்ரோத்ரஸ்ய யத் மனஸ: இவ்விதமாகச் சம்பந்தப்படுகிறது: वाचं வாசம்:—இது वाक् வாக் என்னும் பதத்தின் இரண்டாம் வேற்றுமை. இதைமாற்றி இவ்விடத்தில்वाक् வாக் என்கிற முதல் வேற்றுமையையே கிரகிக்கவேண்டும். ஏனெனின் प्राणस्य प्राण: ப்ராணஸ்ய ப்ராண: என்று மேல் முதல்வேற்றுமைதான் உபயோகிக்கப்பட் டிருக்கிறது. ஆக்ஷேபம்:—वाचं வாசம் என்று வியக்தமாய் இரண்டாம் வேற்றுமை உபயோகிக்கப்பட்டிருப்பதால் प्राण: ப்ராண: என்கிற முதல் வேற்றுமையை மாற்றி प्राणं ப்ராணம் என்கிற இரண்டாம் வேற்றுமையாக ஏன் செய்யக்கூடாது.

உத்தரம்:—அப்படிச் செய்யக்கூடாது. அநேகங்களை அனுசரித்து ஒன்றை மாற்றுவது உசிதம். स: ஸ: प्राण: ப்ராண: என்று இரண்டு பதங்கள் சந்தேக மன்றியில் முதல் வேற்றுமையி லிருக்கின்றன. श्रोत्रं मन: चक्षु: ச்ரோத்ரம் மன: சக்ஷு: இவைகள் முதல் வேற்றுமையி லிருந்தாலும் இருக்கலாம், இரண்டாம் வேற்றுமையி லிருந்தாலு மிருக்கலாம். वाचं வாசம் என்கிற ஒரேபதம் வியக்தமாய் இரண்டாம் வேற்றுமையி லிருக்கிறது. ஆகவே முதல் வேற்றுமையிலுள்ள பதங்கள் அதிகமானதால் वाचं வாசம் என்கிற இரண்டாம் வேற்றுமையை वाक् வாக் என்கிற முதல் வேற்றுமையாக மாற்றிக்கொள்ளவேண்டியது. வேறு ஒரு காரணமுண்டு. ஒரு வஸ்துவைக் குறித்து ஒருவன் கேள்விகேட்டால் மறுமொழியில் அதை முதல்வேற்றுமையில் சொல்லுவதே லோக வழக்கமா யிருக்கிறது.

स उ प्राणस्यप्राण:—ஸ உ ப்ராணஸ்ய ப்ராண: நீ எதைப்பற்றிக் கேட்டாயோ அது பிராணனுடைய அதாவது பிராணன் என்று பெயருள்ள பிராணவிர்த்திக்கு[43] ப் பிராணனாயிருக்கிறது. பிராணனுடைய சாமர்த்தியமானது ஜீவிக்கும்படிச் செய்யும் விஷயத்தில்

---

வி :—प्राणस्यप्राण: ப்ராணஸ்ய ப்ராண: = எது பிராணனுக்கு ஜீவிக்கச் செய்யும் தன்மையைக் கொடுத்து தான் பிராணஹீனமற்ற சேஷ்டையுடன் கூடியிருக்கிறதோ,

स उ ஸ உ = அது அந்த பரமாத்மாவே

---

து :—प्राणस्य = ப்ராணஸ்ய = முக்கியப் பிராணனுடைய

प्राण: ப்ராண: = பிரேரகனே.

---

43. சரீரத்திலிருக்கிற வாயுவுக்கு பிராணன், அபானன், வியானன் சமானன், உதானன் என்கிற விர்த்தி பேதங்களிருக்கின்றன.

ச:—காணப்படுகிறது. ஆத்மாவால் இந்த சாமர்த்தியம் கிடைக்கிறது. ஆத்மாவுடன் இந்த பிராணன் சம்பந்தப் படாவிட்டால் பிராணன் 44 தன் காரியத்தைச்செய்யமாட்டாது. இதற்குச்சுருதிப் பிரமாணங்கள்:—

(1) कोह्येवान्यात् कः प्राण्याद्यदेष आकाश आनन्दोनस्यात् ॥ ते 2-7 ॥

கொஹ்யேவாந்யாத்க: ப்ராண்யாத்யதேஷ ஆகாஶ ஆநந்தோ நஸ்யாத் ) தை 2-7

(அர்த்தம்:—ஹிருதயாகாசத்தி லிருக்கிற ஆநந்த ஸ்வரூபமான ஆத்மா இல்லாவிட்டால் எதுதான் சலிக்கும், எதுதான் பிராணனுடிருக்கும்.)

(2) ऊर्ध्वंप्राणं उन्नयत्यपानं प्रत्यगस्यति ॥ कठ 2-5-3 ॥

ஊர்த்வம்ப்ராணம் உந்நயத்யபாநம் ப்ரத்யகஸ்யதி ॥ க2-5-3

(அர்த்தம்:—ஆத்மா பிராணனை மேலே போகும்படிக்கும் அபானனைக் கீழே போகும்படிக்கும் செய்கிறுன்.

(3) இந்த கேனுபநிஷத்திலேயே சொல்லியிருக்கிறதாவது:—

येन प्राण: प्रणीयते तदेवब्रह्मत्वं विद्धि ॥ के 1-8 ॥

யேநப்ராண: ப்ரணீயதே ததேவப்ரஹ்மத்வம்வித்தி ॥ கே I. 8

(அர்த்தம்:—எதினுல் பிராணன் சலிக்கும்படிச் செய்யப்படுகிறுனே அதுவே பிரம்மம் என்று நீ அறி.)

ஆக்ஷேபம்:—प्राण ப்ராண சப்தம் பிராணேந்திரியத்தையும் பிராணவாயுவையும் குறிப்பிடும். பிரகிருதத்தில்மேல் श्रोत्रस्य ஶ்ரோத்ரஸ்ய என்று இந்திரிய பிரஸ்தாபம் வந்திருப்பதாலும்கீழே चक्षुषः சக்ஷுஷ: என்று இந்திரிய பிரஸ்தாபமே வந்திருப்பதாலும் மத்தியில் வரும் प्राण ப்ராண சப்தமும் பிராண இந்திரியத்தையே குறிப்பிடவேண்டும்.

---

து:— चक्षुषः சக்ஷுஷ: = சக்ஷுரிந்திரியத்துக்கு

चक्षुः சக்ஷு: = பார்க்கும் சக்தியைக் கொடுக்கிறுனே அதாவது அந்தந்த இந்திரியத்திற்கும் அதனதன் சக்தியைக் கொடுக்கப் பட்டவன் என்று அர்த்தம்.

---

44. இரதம் முதலிய அசேதன பதார்த்தங்களின் பிரவிர்த்தி சேதன சம்பந்தத்தால் தானுண்டாகிறது. சேதன ஸ்வரூபமான மனிதன் சம்மந்தப்பட்டால் தான் தேர் இடத்தை விட்டுக் கிளம்புகிறது. இது போல் ஜடமான பிராணன் சலிக்கிறதாகத் தெரிய வருகிறது. ஆகையால் முதலில் சேதனசம்பந்தம் பிராணனுக்கு உண்டாகித்தானிருக்க வேண்டும்.

ச:—உத்தரம்:—ஆம்-நீ சொல்லுவது யுக்தமே. சுருதியின் கருத்து என்னவெனில் எவனுக்காக சகல கரணங்களும் பிரவிர்த்திக்கின்றனவோ அவனே பிரம்மம் என்று அறியவேண்டியது. **चक्षुष: चक्षु:** —வக்ஷுஷஃவக்ஷுஃ அப்படியே, நீ யாதொன்றைக் கேட்டாயோ அது கண்ணுக்குக் கண்ணுயிருக்கிறது. அதாவது ரூபத்தைப் பிரகாசிப்பிக்கிற சக்ஷுரிந்திரியத்தின் ரூபக்கிரகண சாமர்த்தியம் ஆத்ம சைதன்னியத்தின் சம்பந்தத்தால்தான் உண்டாகிறது. ஆகவே அது (பிரம்மம்) நேத்திரத்துக்கு நேத்திரமா யிருக்கிறது.

**अतिमुच्य** அதிமுச்ய இந்த பதத்திற்கு முன் **ज्ञात्वा** ஜ்ஞாத்வா[45] என்ற பதத்தைச்சேர்த்துக்கொள்ளவேண்டியது. ஏனெனின் (1) கேள்வி கேட்டவன் கேட்ட வஸ்துவை தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற ஆசைகொண்டிருக்க வேண்டுமாதலால் சுரோத்திராதி இந்

---

வி:—(**इति**) **एवं अतिमुच्य** இதி ஏவம் அதிமுச்ய = என்று இப்படி அறிந்து

**अस्मात् लोकात्** அஸ்மாத் லோகாத் = இந்த லோகத்தினின்றும்

**प्रेत्य** ப்ரேத்ய = அர்ச்சிராதி மார்க்கத்தால் போய்

**अमृताभवन्ति** அம்ருதாபவந்தி = முக்தர்கள் ஆகிறார்கள். ||2||

---

து:—**स: उ** ஸஃ உ=காது முதலிய இந்திரியங்களின் பிரேரகன் யார் என்று நீ கேட்டாயோ, அந்தப் பிரேரகன் பிரசித்தமாயும் தியானத்துக்கு விஷயமாயு மிருக்கிற நாராயணனே. எவன் பிராணனுக்கு நியாமகனும் கண் முதலிய இந்திரியங்களுக்கும் நியாமகனுயுமிருக்கிறானே அவன் விஷ்ணு வென்று அறியத்தக்கது. இவைகளுக்கு மட்டும் தான் பிரேரகனல்ல. இதர ஞானகர்ம இந்திரியங்களுக்கும் இவனே பிரேரகன். காது முதலிய இந்திரியங்களை பிரேரணை செய்கிறவன் விஷ்ணு என்று அறிகிறவனுக்கு என்ன பலன் கிடைக்கிற தெனில்.

**अतिमुच्य** அதிமுச்ய முதல் சொல்லுகிறார்

**धीरा:** தீராஃ = காது முதலியவைகளைப் பிரேரணைசெய்யும் தர்மம் விஷ்ணுவினுடையது என்று அறிகிற புத்திமான்கள் மனோதைரியமுள்ளவர்கள்

**अस्मात्** அஸ்மாத் = பஞ்சமகா பூதங்களாலான இந்த

**लोकात्** லோகாத் = தேகத்தினின்றும்

**प्रेत्य** ப்ரேத்ய = வெளிப்பட்டு அதாவது இறந்து

**अतिमुच्य** அதிமுச்ய = லிங்கதேகத்தைவிட்டு, சம்சாரத்தினி

---

45. இந்த பதம் சேர்த்துக் கொள்வதற்கு காரணம் சொல்லுகிறார்.

ச—திரியங்களுக்கு சுரோத்திராதி ரூபமாயிருக்கிற பிரம்மத்தை அறிந்து என்று மேல்பதங்களுக்கு அர்த்தம் செய்யவேண்டும். (2) மேலும், अमृताभवन्ति அம்ருதாபவந்தி (மரண மில்லாதவர்களாக ஆகிறார்கள்) என்று மேல் பலன் சொல்லப்பட்டிருக்கிறது. மரண மில்லாமை அதாவது மோக்ஷம் ஞானத்தால் கிடைக்கிறது. ஞான த்தைச் சம்பாதித்து ஒருவன் முக்தனாகிறான். ஆகையால் ज्ञात्वा ஜ்ஞாத்வா என்னும் பதத்தைச்சேர்த்துக்கொள்ள வேண்டியது. இப் படிப்பட்ட ஞானத்தால் சுரோத்திராதிகளை விட்டு அதாவது அவைகளிடத்தில் ஆத்மபாவத்தை விட்டு மோக்ஷத்தை அடை கிறார்கள். என்று அர்த்தம் சொல்லவேண்டியது.

अतिमुच्यधीराः — அதிமுச்யதீரா: சுரோத்திராதிக ளிடத்தில் ஆத்மபாவத்தை தரிப்பதினால் அவைகள் உபாதிகளாகி அப்படி பாவங்கொண்டவனை ஜனனமரணரூப சம்சார சாகரத்தில் விழும் படிச் செய்கின்றன. ஆகையால் சுரோத்திர முதலியவைகளுக்குச் சுரோத்திரமுதலியதா யிருக்கும் யாதொரு பிரம்மம் உண்டோ அதுவே ஆத்மா என்று அறிந்தும் சுரோத்திர முதலியவைகளிடத் தில் ஆத்மபாவத்தை விடுகிறவர்களே புத்தியுள்ளவர்கள். சுரோத் திராதி சுரோத்திரம் ஆத்மா என்னும் விசேஷ புத்தியில்லாதவரை யில் சுரோத்திராதிகளிடத்தில் ஆத்மபாவத்தை விட்டுவிட முடி யாது.

---

து :—ன்றும் விடுபட்டு, அல்லது, ஹிருதயத்தின் அக்கிர பாகத்தில் ஜ்வலிக்கும் பிரகாசத்தின் வழியாய் நாராயணனை அடைந்து, பிரா ரப்த கர்மத்தைத் தாண்டி.

अमृताः அம்ருதா: = முக்தர்களாக

भवन्ति பவந்தி = ஆகிறார்கள்.

प्राणस्यप्राणं उ त चक्षुषः चक्षुः ப்ராணஸ்யப்ராணம் உத சக்ஷு ஷ: சக்ஷு: = (IV - 4 - 18) முதலிய காண்வ (बृहदार) ப்ருஹ தார சுருதிகளாலும் प्राणादयोवाक्यशेषात् ப்ராணாதயோ வாக்யசே ஷாத் = என்னும் (I - 4 - 12) பிர்ம்ம சூத்திரத்தாலும் பிராணாதி. களின் நியந்தா விஷ்ணு வென்றே நிச்சயிக்க வேண்டும் என்று பாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த மந்திரத்திற்குப் பிரமாண வசனம் :—

यः प्राणस्यप्रणेताचचक्षुरादेश्चसर्वशः —

ய: ப்ராணஸ்ய ப்ரணேதாசசக்ஷுராதேச்சஸர்வச:

ச:—प्रेत्य 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 = இந்த லோகத்தினின்றும் வெளியே யிருந்துகொண்டு; அதாவது, புத்திரன், மித்திரன், களத்திரம், முதலானவர்களிடத்தில் அஹந்தை மமதைகளை அதாவது நான், என்னுடையது என்னும் பாவத்தைவிட்டு

अमृताभवन्ति 𑌅𑌮𑍃𑌤𑌾𑌭𑌵𑌂𑌤𑌿 = மரணதர்ம மில்லாதவர்களாக ஆகிறார்கள். இதற்குப் பிரமாண வசனங்கள்:—

(1) न कर्मणा नप्रजयाधनेन त्यागेनैके अमृतत्वमानशुः ॥ नारायणोपनिषत् 12-3 ॥

𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌨𑌪𑍍𑌰𑌜𑌯𑌾𑌧𑌨𑍇𑌨 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇𑌨𑍈𑌕𑍇 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌾𑌨𑌶𑍁𑌃 ॥ 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍 ॥ 12-3 ॥

(அர்த்தம்:—கர்மத்தாலும், பிரஜையாலும், தனத்தாலும் மோக்ஷம் கிடைக்கிறதில்லை. தியாகம் என்கிற இச்சைகளை விடுவதினால் மாத்திரம் மோக்ஷம் அடையப்படுகிறது.

(2) पराञ्चिखानिव्यतृणत् ...

आवृत्तचक्षुरमृतत्वमिच्छन् ॥ कठ 2-4-1 ॥

𑌪𑌰𑌾𑌂𑌚𑌿𑌖𑌾𑌨𑌿𑌵𑍍𑌯𑌤𑍃𑌣𑌤𑍍...

𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍 ॥ 𑌕॰ 2-4-1 ॥

(அர்த்தம்:—இந்திரியங்கள் வெளியிலுள்ள பதார்த்தங்களைப் பார்க்கத் தன்மையுள்ளவைகள். மோக்ஷம் வேண்டுமென்று இச்சிக்கிறவன் இந்திரியங்களை விஷயங்களில் விடாமல் விஷயங்களைத் தள்ளிவிட வேண்டியது.

(3) यदासर्वेप्रमुच्यन्ते ...

अत्रब्रह्मसमश्नुते ॥ कठ 2-6-14 ॥

𑌯𑌦𑌾𑌸𑌰𑍍𑌵𑍇𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌂𑌤𑍇...

𑌅𑌤𑍍𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ॥ 𑌕-2-6-14

(அர்த்தம்:—எந்தக்காலத்தில் எவனுக்கு சகல இச்சைகளும் நிவிர்த்தியாய் விடுகின்றனவோ அந்தகாலத்தில் அவனுக்கு பிரம் மானுபவம் உண்டாகிறது). (இவ்விதமாக சகலத்தையும் விட்டவ னுக்குத்தான் மோக்ஷம் கிடைக்கும் என்று மேற்சொன்னதற்கு ஒத்துமையாக சுருதிகள் சொல்லுகின்றன.)

अतिमुच्य – प्रेत्यः – 𑌅𑌤𑌿𑌮𑍁𑌚𑍍𑌯 - 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 இப்பதங்களுக்கு வேறு அர்த்தம் செய்யலாம். अतिमुच्य 𑌅𑌤𑌿𑌮𑍁𑌚𑍍𑌯 என்னும் பதத் திற்கு இந்திரியங்களிடத்தில் ஆத்மபாவத்தை விட்டு என்னும் முன்செய்த அர்த்தத்துடன், மூன்றுவித இச்சைகளையும் விட்டு என்னும் அர்த்தமும் சித்திக்கிறது.] ஆனதால் प्रेत्य 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 என்

3. नतत्रचक्षुर्गच्छति नवाग्गच्छति नोमनो नविद्मो
नविजानीमो यथैतदनुशिष्यादन्यदेव तद्विदिता
दथो अविदितादधि । इति शुश्रुम पूर्वेषां
ये नस्तद्व्याचचक्षिरे ॥ ३ ॥

நதத்ரசக்ஷுர்க³ச்ச²தி நவாக்³க³ச்ச²தி நோமநோ நவித்³மோ
நவிஜாநீமோ யதை²தத³நுஶிஷ்யாத³ந்யதே³வ தத்³விதி³தா
த³தோ² அவிதி³தாத³தி⁴ । இதி ஶுஶ்ரும பூர்வேஷாம்
யே நஸ்தத்³வ்யாசசக்ஷிரே ॥ ௩ ॥

तत्र தத்ர = அந்தப் பிரம்மத்தினிடத்தில்
चक्षुः சக்ஷு: = நேத்திரம்
नगच्छति நக³ச்ச²தி = போகிறதில்லை.
वाक् வாக் = வாக்கு
नगच्छति நக³ச்ச²தி = போகிறதில்லை.
मनः மந: = மனது
नोगच्छति நோக³ச்ச²தி = போகிறதில்லை.
नविद्मः நவித்³ம: = அதை நாம் அறியோம்.
यथा யதா² = எந்தப்பிரகாரம்
एतत् ஏதத் = இந்தப் பிரம்ம ஸ்வரூபத்தை
अनुशिष्यात् அநுஶிஷ்யாத் = சிஷனுக்கு உபதேசிக்கக் கூடுமோ
(तथा ததா² = அந்த வழியையும்)
नविजानीमः நவிஜாநீம: = அறியமாட்டோம்.
तत् தத் = அது
विदितात् விதி³தாத் = வியக்தமாய் தெரியப்பட்ட பிரபஞ்சத்தைக் காட்டிலும்
अन्यदेव அந்யதே³வ = வேறாகவே இருக்கிறது.
अथ அத² = மேலும்,

---

ச:—பதற்கு முன்செய்த அர்த்தத்தை (புத்திராதிகளிடத்தில் நான் என்னுடையது என்னும் பாவத்தை) விட்டு, இந்தச் சரீரசம்பந்தம் விட்டபிறகு அதாவது மரணத்திற்கு 46 பிறகு என்று அர்த்தம் செய்யவேண்டியது. ॥ 2 ॥

---

46. இவ்விடத்தில் விதேக முக்தி சொல்லப்படுகிறது :—சரீரபதனத்தால் பிராரப்தம் தீர்ந்து விட்டது. ஞான பலத்தால் சஞ்சிதம் முதலியவை நசித்துப் போய் விட்டது. புது சரீரம் உண்டாகக் காரணமில்லை ஆகவே வித்வானுக்கு முக்தி அவசியம் சித்தமாகிறது.

अविदितात् அவிதிதாத் = அறியப்படாத அவ்வியாகிருதத்தைக் காட்டிலும்

अधि அதி = வேறாகவே யிருக்கிறது.

इति இதி = இப்படி

ये யே = எந்த ஆசாரியர்கள்

नः நஃ = எங்களுக்கு

तत् தத் = அதை

व्याचचक्षिरे வ்யாசசக்ஷிரே = சொன்னார்களோ

(तेषां தேஷாம் = அந்த)

पूर्वेषां பூர்வேஷாம் = பூர்விகர்களுடைய

(वचनं வசநம் = வசனத்தை)

शुश्रुम ஶுஶ்ரும = கேட்கிறோம் [கேட்டிருக்கிறோம்).

नतत्रचक्षुःगच्छाति நதத்ரசக்ஷுஃகச்சதி[47] = பிர்ம்மமானது

---

வி:—மேற்சொன்னதையே விஸ்தாரமாய் नतत्र நதத்ர முதல்சொல்லுகிறார். ஆனால் அது எப்படி உபதேசிக்கத் தக்கதெனில்

नविद्मः नविजानीम : நவித்மஃ நவிஜாநீமஃ என்று சொல்லுகிறார். அது என்னவென்று கேட்கப்பட்ட ஆசாரியர் அந்தரிந்திரியத்தினாலும் பாஹ்ய இந்திரியத்தினாலும் பிரம்மம் அறியத்தக்கதல்லவென்று உபதேசிக்கவேண்டும்.

---

து:—எந்த மாஹாத்மியத்தை அறிவதினால் ஜீவன் முக்தனாகிறானோ அப்படிப்பட்ட ஹரியினுடைய பிரேரணை செய்தல் முதலிய மகாத்மியம் எப்படிப்பட்டது என்று கேட்குங்கால், அது அளவற்றதாயிருப்பதால் அதின் பூர்ணஞான முண்டாக மாட்டாது; சுரோத்திராதிகளை நியமனம் செய்யும் நாராயணன் சகல தேவதைகளாலும் பூர்ணமாய் அறியத்தக்கவனல்ல; இந்த அபிப்பிராயத்துடன் नतत्र நதத்ர என்னும் மந்திரத்தைச் சொல்லுகிறார்.

---

47. இந்த மந்திரார்த்தத்திற்குச் சமானமான அர்த்தம் கடோபநிஷத்தில்

"नैववाचा नमनसा प्राप्तुंशक्योनचक्षुषा"

நைவவாசா நமநஸா ப்ராப்தும் ஶக்யோநசக்ஷுஷா

என்கிற 6-வது வல்லி 12-வது மந்திரத்திலும், முண்டகோபநிஷத்தில் नचक्षुषागृह्यते नापिवाचा நசக்ஷுஷாக்ருஹ்யதே நாபிவாசா முதலிய 3-வதுகண்டம் 8-வது மந்திரத்திலும், தைத்திரீய உபநிஷத்தில் "यतोवाचोनिवर्तन्ते अप्राप्य मनसासह" யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸாஸஹ என்கிற 2-வது வல்லி 4-வது அனுவாகத்திலும் காணப்படுகிறது.

ஸ:—சுரேத்திரம் முதலிய இந்திரியங்களுக்குச் சுரோத்திரம் முதலியதாக இருப்பதால் அதாவது பிர்ம்மம் சுரோத்திரம் முதலியவைகளுக்கு அதிஷ்டான ஆத்மாவாயிருப்பதால் 48 (அதாவது சுரோத்திராதிகளின் சக்தியே பிர்ம்ம ஸ்வரூபமாயிருப்பதால்) கண் பிர்ம்மத்தினிடத்தில் போகிறதில்லை. ஏனெனின் தன்னிடத்தில் தான் போவது அசம்பாவிதம்.

---

து:—तत्र தத்ர = ஜகத்தை நடத்துதல் முதலிய ஹரியினுடைய யாதொரு மஹிமை யுண்டோ அந்த விஷயத்தை

चक्षुः சக்ஷு: = கண், கண்ணால் குறிப்பிடப்பட்ட சகல இந்திரியங்கள் அதாவது அவைகளின் அபிமானி தேவதைகள் என்பது கருத்து, கேவலம் ஜட இந்திரியங்களல்ல.

**नगच्छति** நகச்சதி = அறியப்பிரவிர்த்திக்கிறதில்லை. சக்ஷுராதி அபிமானி தேவதைகளான சூரியன் முதலிய தேவதைகள் அறியப்பட்டாலும் சர்வோத்தமனான பகவான் அறியப்பட மாட்டார்,

---

"**नैतद्देवाआप्नुवन्**" நைதத்தேவாஆப்நுவந் என்றும் ஈசாவாஸ்யத்தின் 4 - வது மந்திரத்திலும், "**नदृष्टेः द्रष्टारं**" நத்ருஷ்டே: த்ரஷ்டாரம் முதலிய பிரஹ 3-4-2 வாக்கியத்திலும், "**अदृष्टोद्रष्टा**" அத்ருஷ்டோத்ரஷ்டா முதலிய பிரஹ 3-7-23-வது வாக்கியத்திலும் "**एषहिद्रष्टा**" ஏஷஹி த்ரஷ்டா முதலிய பிரசன உபநிஷத்து 4-9-வது வாக்கியத்திலும் காணப்படுகிறது.

48 **श्रोत्रस्य श्रोत्रं** ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம் முதலிய வசனங்களின் லக்ஷியார்த்தம் "சுரோத்திரம் முதலியவைகளின் அதிஷ்டானம் பிரம்மம்" என்று சொல்லப்பட்டது. இதன்பேரில் சங்கை :—பழுதையாகிற அதிஷ்டானத்தின் பேரில் சர்ப்பத்தின் அத்தியாசம் உண்டாகிறது. அதிஷ்டானமான பழுதை இந்திரியத்துக்கு விஷயமாகிறது. (அதாவது நம்முடைய அறிவுக்கு பாத்திரமாகிறது.) இதுபோல் சுரோத்திரம் முதலியவைகளின் அதிஷ்டான சைதன்னியமும் இந்திரயத்துக்கு விஷயமாகவேண்டுமே என்னும் சங்கையை நிவர்த்தி செய்கிறுர். அத்தியஸ்த (பிரமைக்கு விஷயமான) பதார்த்தத்தின் ஸ்வரூபம் அதிஷ்டானமாகவே இருக்கிறது. ஏனெனின் அத்தியாச முண்டாவதற்கு முன்னும், அத்தியாச மிருக்குமளவிலும், அத்தியாசம் நீங்கின பிறகும், இப்படி மூன்று காலங்களிலும் அதிஷ்டானம் விபசாரத்தை அடைகிறதில்லை அதாவது மாறித்தோன்றுகிறதில்லை, ஆனால் ஒரேவிதமாய் இருக்கின்றது. மேலும் தன் ஸ்வரூபம் தனக்கே விஷயமாவது யதார்த்த தர்மமன்று. ஆகவே பிரம்மம் அதிஷ்டானமா யிருப்பதால் விஷயமாகும் என்று சொல்லுவது யுக்தமன்று.

ச:—नवाक्गच्छति நவாக்ஃமச்ச தி = அதினிடத்தில் வாக்கும் 49 போகமாட்டாது (பிரவேசித்து வர்ணிக்கமாட்டாது) ஏனெனின், வாக்கால் உச்சரிக்கப்படும் சப்தம் எப்போது தன்னால் குறிப்பிடப் படும் விஷயத்தைப் பிரகாசிக்கிறதோ, அப்போது வாக்கு அப்படி குறிப்பிடப்பட்ட விஷயத்திற்குப் போகிறதாகச் சொல்லுவது வழக்கம். அந்த சப்தத்திற்கும் அதை உண்டாக்குகிற வாக்கு என்கிற இந்திரியத்துக்கும் ஆத்மா (ஸ்வரூபம்) பிர்ம்மமாயிருப்பதால் (முன்சொன்னபடி) வாக்கும் பிர்ம்மத்தினிடத்தில் போகிறதில்லை.

இவைகளுக்குத் திருஷ்டாந்தம் பொசுக்கிறதும் பிரகாசிப்பிக்கிறதுமான ஸ்வபாவமுள்ள அக்கினி தன்னையே பொசுக்கிறதில்லை, பிரகாசிப்பிக்கிறதில்லை.

नोमनो நொமநொ = மனதும் 50 அதினிடத்திற் போகிறதில்லை. ஏனெனின் தனக்கு வேறான விஷயங்களை சங்கற்பிக்கிறதாயும் நிச்சயிக்கிறதாயுமிருக்கிற மனது தன்னையே சங்கற்பிக்கமாட்டாது. நிச்சயிக்கமாட்டாது. மனதின் ஸ்வரூபமே பிர்ம்மமானதால் (முன் சொன்னபடி மனது பிர்ம்மத்தினிடத்திற் போகமாட்டாது).

नविद्मः நவித்மஃ = வஸ்து வின்பிரத்தியக்ஷ ஞானம்இந்திரியங்களாலும் மனதினாலும் 51 உண்டாகிறது. பிர்ம்மமோ இவைகளுக்கு

---

து:—वाक् வாக் = சகல வேதங்களும்

नगच्छति நமச்சதி = அந்த மஹிமையை பூர்ணமாய் அறியப் பிரவிர்த்திக்கிறதில்லை

मनः மநஃ = மனது, அதாவது மனதின் அபிமானி தேவதை

नो நொ = அறியப் பிரவிர்த்திக்கிற தில்லை. கண் முதலியவைகளால் குறிப்பிடப்பட்ட சகல தேவதைகளுங்கூட அதை முழுமையும் அறிகிறதில்லை.

---

49. கண் போகாவிட்டாலும் ஸ்வர்க்காதிகள் போல் பிர்ம்மம், வாக்குக்கு விஷயமாக மாட்டாதோ எனின் சொல்லுகிறார்.

50. சுகதுக்கம் முதலியவைகளை அந்தக்கரணம் கிரஹிப்பது போல் மனது பிர்ம்மத்தை அடையட்டுமே எனில் சொல்லுகிறார்.

51. பிரம்மமே ஒன்றுக்கும் விஷயமன்று. ஆகவே சாஸ்திரத்தாலும் ஆசாரியராலும் செய்யப்பட்ட உபதேசத்துக்குத்தான் பிர்மம் எப்படி விஷயமாகும். இப்படி ஒருவன் சங்கித்தால், வாஸ்தவத்தில் அது ஒன்றுக்கும் விஷயமல்ல என்று சொல்லுகிறார்.

ச:—விஷயமன்று (அதாவது இவைகளால் தெரிந்துகொள்ளத் தகுந்ததல்ல) ஆகையால் பிர்ம்மம் இப்படிப்பட்டது என்று நாம் தெரிந்துக்கொள்ளவில்லை.

**नविजानीम: ... अनुशिष्यात्** நவிஜாநீமஃ ... அநுஶிஷ்யாத் = (நாமே அறியாதபடியால்) சிஷ்யர்களுக்கு இந்தப் பிரம்மத்தை எவ்விதமாய் உபதேசிக்கலாம்[52] என்பதை நாம் அறியவில்லை. ஏனெனின் எந்த பதார்த்தம் இந்திரியங்களால் அறியக்கூடியதாக இருக்கிறதோ, அதற்கு ஜாதி[53], குணம், கிரியை, விசேஷணம் முதலியவை இருக்கும். அவைகளால் பிறருக்கு அதை உபதேசம் செய்யமுடியும். பிரம்மத்தினிடத்தில் ஜாதி முதலிய தர்மங்கள் யாதொன்றுமில்லாதபடியால் அதைப்பற்றி சிஷ்யனுக்கு உபதேசம் செய்ய முடியாது.

**नविद्म:**—நவித்மஃ = நமக்குத் தெரியவில்லை. குரு உபதேசிப்பதிலும் சிஷ்யன் கிரஹிப்பதிலும், இருவரும் விசேஷமான பிரயத்தினத்தைச் செய்யவேண்டும் என்பதை இந்தச் சுருதிவசனம் காட்டுகிறது.

---

து:—(**अत:** அதஃ = ஆகையால்)

**यथा** யதா — எந்தப்பிரகாரத்தால்

**एतत्** ஏதத் = இந்தப் பிராணன் முதலான ஜகத்தை

**अनुशिष्यात्** அநுஶிஷ்யாத் பிரேரணைசெய்கிறதோ

(**तत्प्रकारं** தத்ப்ரகாரம் = அந்தப் பிரகாரத்தை

**नविद्म:** நவித்மஃ = நாம் அறியவில்லை

**नविजानीम:** நவிஜாநீமஃ = (சாமானிய ஞானமே இல்லை, விசேஷஞானந்தான் எப்படி இருக்கப்போகிறது என்கிற அபிப்பிராயத்துடன் சொல்லுகிறார்) விசேஷ ரீதியாயும் நாம் அறியமாட்டோம்.

---

52. உபதேசிக்கலாம் யாருக்கு என்பதை மூல சுருதியில் சொல்லாவிட்டாலும் சிஷ்யனுக்கு என்ற அபிப்பிராயம் வியக்தமாய் காணப்படுகிறது.

53. (1) ஜாதியால் உபதேசமென்றால் "இவன் பிராமண ஜாதியில் சேர்ந்தவன்" முதலிய ஜாதிவிவரங்களால் உபதேசித்தல். (2) குணத்தால் உபதேசமென்றால் "இது கருப்பு" என்ற முதலிய குணவிவரத்தால் உபதேசம். (3) கிரியையால் உபதேச மென்றால் "இவன் சமயல்காரன்" (சமயல் கிரியைசெய்கிறவன்) முதலியவிவரங்களால் உபதேசித்தல் (4) விசேஷணத்தால் உபதேச மென்றால் இவன் "அரசனுடைய சேவகன்" முதலிய சம்பந்தத்தைக் காட்டும் விசேஷணத்தால் உபதேசித்தல். பிரம்மத்தினிடமோ ஜாதி முதலியவைகள் இல்லை. ஏனெனில் **केवलोनिर्गुणश्च** கேவலோநிர்குணஶ்ச அதாவது பரமாத்மா ஒன்று, குணமற்றது என சுவேதாசுவதரம் 6-11. முதலிய சுருதிகள் சொல்லுகின்றன.

ச:—अन्यदेव...अधि—அந்யதேவ...அயி = மேற்சொன்ன வசனத்தினால் அதாவது நமக்குத் தெரியாது என்பதினால உபதேசமே கூடாது என்றுமுடியும். இதை நிவர்த்திக்கும்பொருட்டு சொல்லுகிறார். பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களால் பிரம்மத்தை அறியும்படி செய்ய முடியாது என்பது நிஜமே. ஆயினும் வேதத்தால் [54] அதை அறிவது சாத்தியமே என்று சொல்லுவதற்காக ஏற்பட்ட சுருதி வசனமாவது:—

---

வி:—अन्यदेव: அந்யதேவ: = இது வேறுமந்திரமாக எடுக்கப்பட்டிருக்கிறது. எவ்விதத்திலும் அது ஞானத்துக்கு விஷயமாகா விட்டால் அது துச்சமாகும்; பிரம்மத்தை அறியவேண்டுமென்னு மிச்சையால் குருவின் உபாசனை முதலியவைகள் ஏற்படமாட்டா எனில்

अन्यदेव அந்யதேவ = என்று சொல்லுகிறார்.

न: ந: = எங்களுக்கு

ये யெ = முன்னிருந்த எந்த குருக்கள்

तत् தத் = அந்தப் பிரம்மத்தை

व्याचचक्षिरे வ்யாசசக்ஷிரே = உபதேசித்தார்களோ

(तेषां தேஷாம் = அந்த)

पूर्वेषां பூர்வேஷாம் = முன்னோர்களுடைய

विदितात् (अपि) விதிதாத் (அபி) = அறியப்பட்ட வஸ்துக்களை விடவும்

अन्यत् एव அந்யத் ஏவ = பிரம்மம் விலக்ஷணமே,

अविदितात् (अपि) அவிதிதாத் (அபி) = அறியப்படாத வஸ்துக்களை விடவும்

अन्यत् एव அந்யத் ஏவ = பிரம்மம் விலக்ஷணமே

---

து:—अगम्यः सर्ववेदैश्च परिपूर्णत्वहेतुतः। அகம்ய: ஸர்வவேதைஶ்ச பரிபூர்ணத்வஹேதுத:। = (பரிபூரணமாயிருப்பதால் சகல வேதங்களாலும் அறியப்படாதது) என்று ஸ்மிருதி சொல்லுகிறது. பரோக்ஷ, அபரோக்ஷ ஞான நிஷேதத்தின் பொருட்டு, அல்லது, சாமானிய விசேஷ ஞான நிஷேதத்தின் பொருட்டு, அல்லது ஆதரவின் பொருட்டு, नविद्मः नविजानीमः நவித்ம: நவிஜாநீம: = என்று இரண்டு பதங்கள் பிரயோகிக்கப் பட்டிருக்கின்றன.

---

54. வேதப்பிரமாணத்தால் தான் பிரம்மஸ்வரூபம் அறியப்படுகிறது, பிரத்தியக்ஷம் முதலிய இதர பிரமாணங்களால் அறியப்படவில்லை என்பதை பாஷ்யகாரர் பிரம்ம சூத்திரத்தின் I - 3-ன் பாஷ்யத்தில் விவரமாய் எடுத்துக்காட்டியிருக்கிறார்.

ச:—अन्यदेवतद्विदितादथो अविदितादधि அந்யதேவ தத்விதிதாதயோ அவிதிதாதயி अन्यदेवतद्विदितात् —அந்யதேவ தத்விதிதாத் = எந்தப் பிரம்மம் சுரோத்திரம் முதலியவைகளுக்கு சுரோத்திரம் முதலியதாகவும், இந்திரியங்களால் அறியப்படாமலு மிருக்கிறதாக பிரகிருதத்தில் சொல்லப்படுகிறதோ அந்தப் பிரம்மம் தெரிந்துகொள்ளப் பட்டவைகளுக்கு வேறாகவே இருக்கிறது. விதிதம் என்றால் ஞானம் என்கிற கிரியையால் எது அடையப்படுகிறதோ அது ஞானமாகிற கிரியைக்கு விஷயமாகிறது. அறியப்பட்ட வஸ்துக்கள் எங்கேயாவது யாருக்காவது தெரிந்திருக்கவேண்டும். ஆதலால் அவைகளெல்லாம் மாயையின் காரியங்கள். காரியங்கள் அறியப்பட்டவைகளிலேயே சேர்ந்தவை. பிரம்மம் இவைகளைவிட வேறானது

---

வி:—इति இதி = என்கிற
(वचनं வசநம் = வசனத்தை)
शुश्रुम ஶுஶ்ரும = கேட்டோம். (வியாக்கியானக்காரர்
आधि ஆதி = என்பதை
अपि அபி=ஆக வைத்துக்கொண்டு அர்த்தம் செய்திருக்கிறார்)

---

து:—(வேறு அர்த்தம்.) கண் முதலிய இந்திரியங்களுக்கு அபிமானிகளான சூரியன் முதலானவர்களால் பகவான் அறியப்படாவிட்டாலும் சர்வ தேவோத்தமரான நீர் அறிந்திருக்கலாமே எனின் नविद्मः நவித்மஃ என்று சொல்லுகிறார்.

(மற்றும் ஒரு அர்த்தம்) சூரியன் முதலானவர்களுக்கு ஸ்வதஃ நாராயணனுடைய ஞான மில்லாவிட்டாலும், சர்வோத்தமரான உம்முடைய உபதேசத்தால் ஞான முண்டாகலாமே எனின்

एतत् ஏதத் = இந்த நாராயண ஸ்வரூபத்தை

यथा = यथावत् யதா=யதாவத் = உள்ளபடி எப்படி

अनुशिष्यात् அநுஶிஷ்யாத் = உங்கள்போன்றவர்களுக்கு உபதேசம் செய்வேனோ

(तथा ததா = அப்படி)

नविद्मः நவித்மஃ = நாம் அறிய வில்லை

(மற்றும் ஒரு அர்த்தம்) நீரும் கொஞ்சங்கூட பிர்ம்மத்தை அறிய மாட்டீரா எனின்

यथा யதா = எப்படி பிரபஞ்சத்தில் ஜனங்கள் இது பசுவுக்குச்சமானம் என்று

अनुशिष्यान् அநுஶிஷ்யாந் = அறிவார்களோ

ச-பா:—अतोअविदितादधि *அதோ அவிதிதாதயி = அப்படியா னல் அது அறியப்படாததாகுமே. இந்த சங்கையை நிவர்த்திக்கும் பொருட்டு சொல்லுகிறார். அது அறியப்படாததைவிட வேறு. அறியப்படாதது என்றால் அறியப்பட்டதற்கு விபரீதமானது. அதா வது தெரிந்துக்கொள்ளப்பட்ட இந்த வியாகிருத பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேறான அவ்வியாகிருதம் அதாவது மாயை, சகலத்துக் கும் காரணமான அவித்தை இந்த அவித்தைக்கு மேற்பட்டது. எது எதற்கு மேற்பட்டிருக்கிறதோ அது அதைவிட வேறு என்பது லோகத்தில் பிரசித்தமாயிருக்கிறது. ஆகையால் அவித்தைக்கு மே ற்பட்டது என்பதினால் அவித்தையைவிட வேறு என்று அர்த்தம். எது அறியப்படும் வஸ்துவோ அது அற்பமாயும், நசித்துப்போகக் கூடியதாயும் துக்கரூபமாயுமிருப்பதால், அது தள்ளத்தக்கதாயிருக் கிறது. பிர்ம்மம் அறியப்பட்டதைவிட வேறானதால் அது தள்ளத் தக்கதன்று*

---

து-பா:—(तथा *ததா = அப்படி பரமாத்மா என்கிற வஸ்து*)

एतत् *ஏதத்* — இன்னது, இன்னதற்குச் சமானம் என்று நாம்

नाविद्म: *நவித்மஃ = அறியோம்*

*பிரேரணை செய்யும் வஸ்து பரிபூரணமா யிருக்கிறதென்பது எதனால் தெரிய வருகிறதெனில், அந்த வஸ்து விலக்ஷணமாயிருக் கிறபடியால் என்று*

अन्यदेव *அந்யதேவ என்பதினால் சொல்லுகிறார். காரிய கார ணாத்மகமான ஜகத்துக்கு விலக்ஷணமானதாகவே அதை அறிவோம் என்கிறார்.*

तत् *தத் = கண்முதலிய இந்திரியங்களால் அறியக்கூடாத வஸ்து, அதாவது பரப்பிரம்மம்.*

विदितात् *விதிதாத் = காரியரூபமான காணப்படும் ஜகத்தை விடவும், இதுமட்டுமல்ல, ஆனால்*

अविदितात् *அவிதிதாத் = காணப்படாத முயற்கொம்பு முதலிய பொய்யான பதார்த்தத்தை விடவும், அவ்வியக்தம் பிரகிருதி முத லிய காரணத்தை விடவும்*

अन्यत् एव *அந்யத் ஏவ விலக்ஷணமாகவே இருக்கிறது.*

विदितात् अन्यत् *விதிதாத் அந்யத் என்று சொல்லின் ஸ்வரூப மற்றதோ என்னும் சங்கை உண்டாகலாம். அதை நிவிர்த்திக்கும் பொருட்டு*

ச-பா:—அப்படியே பிரம்மம் आविदित அவிதி்த த்தைவிட வேறு என்று சொன்னதினுல் கிரகிக்கக் கூடியதன்று என்றும் சொன்னதாக ஆகிறது. ஒருகாரியத்திற்கு அன்னியமான காரணம் அன்னியனுன புருஷனுல் கிரகிக்கப்படுகிறது. அறிகிறவன் வேறு ஒரு பிரயோஜனத்திற்காக தனக்கு வேருன ஒரு வஸ்துவை கிரகிக்கவேண்டியதில்லை. அறியப்பட்டதற்கும் அறியப்படாததற்கும் வேறு அதாவது தள்ளத்தக்கதன்று, கிரகிக்கத்தக்கதன்று என்று சொன்னுல் தன்னைவிட வேருன பிரம்மம் ஒன்று இருக்கிறதாக நினைத்து அதை அறியவேண்டுமென்கிற இச்சை சிஷ்யனுடைய மனதிலிருந்தாலும் அது நிவர்த்தி செய்யப்படுகிறது.

---

து-பா—अविदितात् अन्यत् அவிதி்தாத் அந்ய்த் என்று சொல்லப்பட்டது.

வியக்த அவ்வியக்த ஜகத்தைவிட வேறு என்று சிலர் அர்த்தம் செய்கிருர்கள். காரியகாரணங்களுக்கு விலக்ஷணமென்று சொன்னுல் எவ்விதமாக மஹாத்மியம் கிடைத்தது. காரிய விலக்ஷணத்தன்மை காரணத்தி லிருக்கிறது; காரண விலக்ஷணத்தன்மை காரியத்திலிருக்கிறது. இப்படி இருக்கிறதினுல் காரிய காரணுத்மகமான பிரபஞ்சத்துக்கு மாஹாத்மிய விசேஷம் கிடைத்திருக்கிறதா? இல்லையே. இதுபோல் பிரம்மத்துக்கும் மாஹாத்மியம் கிடைக்காதே, எனின், அது காரிய காரணங்களுக்கு விருத்தமான லக்ஷணத்தை உடையது.

अन्यत् அந்ய்த் = என்பதற்கு விருத்த லக்ஷணமுள்ளது என்று அர்த்தம். அந்த விருத்த லக்ஷணம் சர்வோத்தமத்தன்மை ஆகையால் மாஹாத்மியம் கிடைத்தது என்று

अधि அயி = என்பதினுல் சொல்லுகிருர்.

அது உத்தமமாயிருப்பதினுலும். आत्मनाविन्दतेवीर्यं ஆத்நா விந்தெவீய்ம் (12 - வது மந்திரம்) என்று சொல்லியிருப்பதால் அதின் பிரசாதத்தால் ஜீவனுக்கு மோக்ஷ சாதனுனுஷ்டான ரூப பிரவிர்த்தி உண்டாகிறபடியாலும் அதின் மாஹாத்மியம் சித்திக்கிறது.

அந்த வஸ்து.

विदितात् अविदि-तात् च விதி்தாத் அவிதி்தாத் வ இவ்விரண்டையும் விட அதாவது எல்லாவற்றையும் விட अधि அயி = அதிகம் அதாவது சிரேஷ்டமாயிருக்கிறது. இதனுல் உபமான மற்றதென்றும் லக்ஷணம் சொன்னதாகஏற்படுகிறது.

ச-பா:—எப்படி எனின் தன்னைக்காட்டிலும்[55] வேறான வஸ்து எதுவோ அது கிரஹிக்கப்படாததாகவாவது தள்ளப்படாததாகவாவது இருக்கமாட்டாது. (அது கிரஹிக்கத்தக்கதாக இருக்கவேண்டும் அல்லது தள்ளத்தக்கதாக இருக்கவேண்டும்.) பிரம்மமோ கிரஹிக்கத்தக்கதுமல்ல, தள்ளத்தக்கதுமல்ல. ஆகையால் தன் ஆத்மாவே பிரம்மம் என்று இந்த வாக்கியத்தின் அர்த்தம். இதற்கு இதரசுருதிப் பிரமாணங்களுமுண்டு :—

(1) अयमात्माब्रह्म ॥ बृह 2-5-19 ॥

அயமாத்மா ப்ரஹ்ம ॥ ப்ருஹ II-5-19

(அர்த்தம்:—இந்த ஆத்மா பிரம்மம்)

(2) य आत्मा अपहतपाप्मा ॥ छां 8-7-1 ॥

ய ஆத்மா அபஹதபாப்மா ॥ சாம் VIII-7-1

பாபமற்ற இந்த ஆத்மா

(3) यत्साक्षादपरोक्षाद्ब्रह्म य आत्मासर्वान्तरः ॥ बृह 3-5-1 ॥

யத்ஸாக்ஷாதபரோக்ஷாத் ப்ரஹ்ம ய ஆத்மாஸர்வாந்தர: ॥

ப்ருஹ III-5-1

(அர்த்தம்:—பிரத்தியக்ஷமாய் அனுபவத்திற்கு வரும் பிரம்மம்; எல்லாருடைய உள்ளேயும் இருக்கிற ஆத்மா.

---

து-பா:—முன் विदितात्अन्यत् விதிதாத் அந்யத் என்று சொன்னதினால் காரியத்துக்குச் சதிர்சம் (सदृश) ஸத்ருஶ அல்ல என்னும் லக்ஷணம் ஏற்படுகிறது. பாஷ்யத்தில் सर्वोत्तमश्चसर्वत्र ஸர்வோத்தமஶ்ச ஸர்வத்ர என்று சொல்லியிருக்கிறது.

இது நம்மால் கற்பிக்கப்பட்டதல்ல வென்பதை इति शुश्रुम = இதி ஶுஶ்ரும என்னும் வாக்கியத்தால் சொல்லுகிறார்

इति = இதி இந்தப்பிரகாரம்

ये = யே எந்த முன்னோர்கள், வியாசர் முதலானவர்கள்

नः = ந: எங்களுக்கு

तत् தத் = அந்தப்பிரம்ம ஸ்வரூபத்தை

व्याचचक्षिरे வ்யாசசக்ஷிரே = வியாக்கியானம் செய்தார்களோ

(तेषां தேஷாம் = அந்த)

---

55. அறிகிறவனைவிட வேறாக ஒன்று இருந்தால் அது அறியப்பட்ட வகுப்பிலாவது அறியப்படாத வகுப்பிலாவது வரவேண்டியது. இவ்விடத்தில் பிரம்மம் அறியப்பட்டதற்கும் வேறு அறியப்படாததற்கும் வேறு என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே அறிகிறவனுடைய ஸ்வரூபமே பிரம்மம் என்பது இந்த வேதவசனத்தின் கருத்து என்று சொல்லுகிறார்.

ச-பா:—**इति शुश्रुमधीराणां** இதி ஶுஶ்ரும தீராணாம் :—இவ்விதமாய் சகலத்திற்கும் ஆத்மாவாயும், யாதொரு விசேஷமன்றியிலும், சுத்தஞானமாகிறதேஜொரூபமாயும், சர்வத்திற்கும் ஆத்மாவாயுமிருக்கிறதே பிரம்மம் என்கிற ஞானம் ஆசாரியர்கள் பரம்பரையாகச் செய்துவந்த உபதேசத்தால் தெரியவருகிறது என்று இதி சுச்ரும (இப்படி கேள்விப்பட்டிருக்கிறோம்) என்று சொல்லுகிறார். பிரம்ம ஸ்வரூபம் ஆசாரியர்கள் பரம்பரையாகச் செய்துவரும் உபதேசத்தால்தான் அறியத்தக்கது. கேவலமான [56] யுக்தியாலாவது, வெகு வேத சாஸ்திரங்களைச் சொல்லிவைப்பதாலாவது, கிரந்தார்த்தத்தை கிரஹிக்கும் சாமர்த்தியத்தாலாவது, அநேக சாஸ்

---

து-பா:—**पूर्वेषां** பூர்வேஷாம் = வியாசாதிகளுடைய

(**वचनं** வசநம் = வசனத்தை)

**शुश्रुम** ஶுஶ்ரும = நாம் கேட்டிருக்கிறோம். வெகு காலமாய் இப்படி கேட்கப்பட்டு வந்திருக்கிறது என்பதைக் காட்டும் பொருட்டு வினைச்சொல்லின் சென்ற காலப்பிரயோகம்.

இந்த மந்திரத்துக்குப் பிரமாண வாக்கியம் :—

**अगम्यः सर्वदेवैश्च परिपूर्णत्व हेतुतः ।**
**सर्वोत्तमश्च सर्वत्र सविष्णुरितिधार्यताम् ॥**

அகம்ய: ஸர்வதேவைஶ்ச பரிபூர்ணத்வ ஹேதுத:
ஸர்வோத்தமஶ்ச ஸர்வத்ர ஸவிஷ்ணுரிதிதார்யதாம் ॥

சக்ஷுராதிகளை உபலக்ஷணமாய் வைத்துக்கொண்டு **सर्वदेवैश्च** ஸர்வதேவைஶ்ச என்று சொல்லலாம் அல்லது, **ब्रह्मा** ப்ரஹ்மா கூட **नविद्मः** நவித்ம: அறியவில்லை என்று சொன்னதால் பிரம்மத்துக்குக் கீழ்ப்பட்ட எல்லாதேவதைகள் என்றும் சொல்லலாம். ॥ 3 ॥

---

56. இந்த அர்த்தம் கடவல்லியில் 2 வது வல்லி
**" अनन्यप्रोक्ते गतिरत्रनास्ति नैषातर्केणमतिरापनेया"**
அநந்யப்ரோக்தே கதி ரத்ர நாஸ்தி நைஷா தர்க்கேண மதிராபநேயா ஆகிய 8 - 9 வது மந்திரங்களிலும்.

**नायमात्मा प्रवचनेन लभ्योनमेधया न बहुनाश्रुतेन**

நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ நமேதயா நபஹுநா ஶ்ருதேந என்கிற 22 - வது மந்திரத்திலும்,

**" न चक्षुषा गृह्यते नापिवाचा नान्यैर्देवैस्तपसा कर्मणावा"**

ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபிவாசா நாந்யைர்தேவைஸ்தபஸா கர்மணாவா என்கிற முண்டகோபநிஷத்தின் 3 - 1 - 8 வது மந்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## 4-வது மந்திரம்.

यद्वाचानभ्युदितं येन वागभ्युद्यते ।
तदेव ब्रह्मत्वं विद्धिनेदं यदिदमुपासते ॥

யஆாவா_நஹ்)-ஷி_த௦ யெ_நவா_மஹ்)-ஷ்)தெ_த ।
_தெஷெவப்_ஹக்ஷ௦ விஷி_நெஷ௦ யஷிஷ உ-வாஸதெ_த

वाचा வாவா = வாக்கிந்திரியத்தால், வசனத்தால
यत् யக = எது
अनभ्युदितं க_நஹ்)-ஷி_த௦ = பிரகாசிக்கப்படவில்லையோ
येन யெ_ந = எதினல்
वाक् வாக் = வாக்கு
अभ्युद्यते கஹ்)-ஷ்)தெ_த = பிரகாசிக்கப்படுகிறதோ
तत् एव _தக வஎவ = அதையே
ब्रह्म ப்ஹ = பிரம்ம ஸ்வரூபமாக
त्वं க்ஷ௦ = நீ
विद्धि விஷி = அறி.
यत् யக = எந்த
इदं உஷ௦ = இந்த, ஆகாரத்துடன்கூடின ஈசுவராதிகளை
उपासते உவாஸதெ_த = உபாசிக்கிறர்களோ
इदं உஷ௦ = இது
ब्रह्म ப்ஹ = பிரம்ம ஸ்வரூபம் न _ந = அன்று.

ச-பா:—திரங்களைப் படிப்பதினலாவது, தபஸ-களாலாவது, யஞ்ஞங்களாலாவது, இவைபோன்ற வேறு எந்தவிதங்களாலாவது இந்த பிரம்ம ஸ்வரூபம் அடையத்தக்கதல்ல.

येनः तत् विचचक्षिरे யெ_நஃ _தக விவவக்ஷிரெ = எங்களுக்கு[57] எந்த ஆசாரியர்கள் பிரம்மத்தைபற்றித் தெளிவாய் உபதேசம் செய்தார்களோ அவர்கள் சொல்ல நாம் கேள்விப்பட்டிருக்கிறோம்.॥3॥

अन्यदे[58]वताद्विदितादथो अविदितादधि க_ந்)தெவ _தஷிஷி_தாஷயொ கவிஷி_தாஷயி = அதாவது அது தெறிந்தவைகளைவிட வேறு, அறிய

57. இதே அர்த்தம் ஈசாவாசியத்தின் 10 - 13 வது மந்திரங்களிலும் வருகிறது. இவ்விடத்திய पूर्वेषां வூ-வெஷா௦ என்னும் பதத்திற்கு பதிலாக அவ்வுபநிஷத்தில் धीराणां யீராணா௦ என்கிற பதம் உபயோகிக்கப் பட்டிருக்கிறது.

58. முன் சொன்ன அர்த்தத்தின்பேரில் தார்க்கிகர் மீமாம்சகர்களுடைய ஆக்ஷேபம் இன்னது என்பதைச் சொல்லி அதைப்பரிஹரிக்கிறர். அறியப்பட்டதைவிட பிரம்மம் வேறு என்று சொன்னதை விஸ்தாரமாய் வியாக்கியானம் செய்யவேண்டும் என்பதே உத்தேசமாம்.

ச-பா:—ப்படாததை (அதாவது அவித்தையை) விட வேறு என்று மந்திரத்தின் வாக்கியத்தினுல் ஆத்மா பிரம்மம் என்று சொல்லி யிருக்க இதைக் கேட்டவனுக்கு அடியில் வருமாறு சங்கை உண்டாகிறது.

**சங்கை:**—ஆத்மா பிரம்மமாக எப்படி இருக்கக்கூடும்? ஏனெனின், முந்தின ஆத்மா என்ருல் கர்மத்தையும் உபாசனையையும் செய்யும்அதிகாரி. இவன் சம்சாரி. இவன் கர்மம் அல்லது உபாசனை இவைகளில் எந்தசாதனத்தையாவது அனுஷ்டித்து பிரம்மாதி தேவதைகள் அல்லது ஸ்வர்க்கம் இவைகளை அடைய இச்சிக்கிருன். ஆகையால் இவனுக்கு அன்னியனுன விஷ்ணு, ஈசுவரன், இந்திரன், அல்லது பிராணனுகிய (ருத்திராத்மாவாகிய) உபாசியன் (உபாசிக்கத்தகுந்த தேவதை) பிரம்மமாக இருக்க யோக்கியமேதவிர ஆத்மா ஒருகாலும் பிரம்மமாக யோக்கியனுகான். ஏனெனின் உலகானுபவம் அப்படியில்லை. மேலும் சில தார்க்கசாஸ்திரிகள் (நையாயிகர்கள், வைசேஷிகர்கள்) ஆத்மா ஈசுவரனைவிட வேறு என்று சொல்லுகிருர்கள். அப்படியே கர்மமார்க்கத்திலிருக்கிற மீமாம்சகர்கள் **अमुं यज अमुं यज** அமும் யஜ அமும் யஜ (பிர-1-4-6) "இதை உபாசி இதை ஆராதி" இந்தவிதமாய் ஆத்மாவுக்கு அன்னியமான தேவதையை உபாசிக்கிருர்கள். ஆகையால் உபாசனைக்கு விஷயம் என்று எது அறியப்பட்டிருக்கிறதோ அது பிரம்மமாயிருக்கத் தகுந்தது. உபாசகனுன ஆத்மா இதைவிட வேருனவன். சிஷ்யனுடைய மனதிலிருக்கிற இந்த சங்கையை அவனுடைய முகக்குறியினுலாவது (கண், வாய் இவைகளின் விகாரத்தாலும்) அவனுடைய வார்த்தைகளாலாவது அறிந்து அதற்குச் சமாதானம் சொல்லுகிருர்,

**சமாதானம்**[59] :— இப்படி சங்கிக்கவேண்டாம். ஏனெனின்

---

**து-பா:**—பிரம்மம் மனதுக்கும் வாக்குக்கும் கோசரமாகிற (விஷயமாகிற) ஜீவஸ்வரூபமாகையால் அது வாங்மனஸுகளுக்கு எட்டாதது என்று சொல்லுவது அயுக்தம், என்னும் ஆக்ஷேபத்துக்கு கண் முதலியவைகள் போகிறதில்லை என்பதற்கு தாற்பரியத்தைச் சொல்லி, இது முதல் ஐந்து மந்திரங்களால் ஜீவப்பிரம்மங்க

---

59. முதல் மந்திரத்திற் கேட்ட கேள்விக்கு இரண்டாவது மந்திரத்தில் நேரான உத்தரம் சொல்லப்பட்டது. ஆயினும் இவ்விடத்தில் வாக்கு முதலியவைகளுக்கு பிரம்மம் விஷயமாக வில்லை என்பது விசேஷமாய்ச் சொல்லப்படுகிறது. இந்த நான்காவது மந்திரம் **केनेषितां वाचं इमां वदन्ति** கேநேஷிதாம் வாசம் இமாம் வதந்தி என்னும் கேள்விக்கு உத்தரம்.

ச-பா:—यत् யத:—எது கேவலம் சைதன்னிய ஸ்வரூபமா யிருக்கிறதோ அது वाचा வாசா — வாக்கினுல் வர்ணிக்கப்படமாட்டாது. வாக்கு என்ருல்:—நாக்கின் அடி முதலிய எட்டு 60 ஸ்தானங்களை ஆசிரயித்துக்கொண்டும் அக்கினியை தேவதையாக உடையதாயும், அகாரம் முதலிய அக்ஷரங்களை பிரகாசிப்பிக்கக்கூடியதாயு மிருக்கிற ஒரு இந்திரியம். அந்த இந்திரியத்தால் அர்த்தத்தை அனுசரித்து ஒருவித கிரமத்தோடுசேர்க்கப்படும் அக்ஷரங்கள் வாக்கு 61 என்று

---

வி-பா:—இதையே விஸ்தரிக்கிருர்.

वाचा வாசா = வாக்கு முதலியவைகளால்

यत् யத் = எது

अनभ्युदितं அநப்யுதிதம் = பிரகாசிப்பிக்கப் படவில்லையோ

---

து-பா:—ளுடைய பரஸ்பரபேதத்தையும், வேறு லக்ஷணங்களையும்சொல்லி, லக்ஷணஞ் சொன்னதற்குப் பிரயோசனத்தையும் சொல்லுகிருர்

यत् யத்= எது

वाचा வாசா= வாக்கினுல் (வாக்கு இந்திரியம் அல்லது வேத வாக்கியம், இதனுல்)

न अभ्युदितं நஅப்யுதிதம் = பூர்ணமாய் வர்ணிக்கப்படவில்லையோ. இதனுல் இந்திரியத்துக்கு விஷயமல்ல வென்னும் லக்ஷணம் சித்திக்கிறது.

எப்படி அசர்வஞ்ஞர்களான தேவதைகள் பிரம்மத்தைப் பூர்ணமாய் அறியவில்லையோ, அப்படியே பரப்பிரம்மமும் அறியவில்லையோ எனின், அப்படியல்ல வென்று येन वाक् अभ्युद्यते येन चक्षूंषि

---

60. மார்பு, கழுத்து, தலை, நாக்கின் அடிப்பாகம், பற்கள், மூக்கு, உதடு, கன்னங்களின் உட்புறம், ஆக எட்டு இடங்களும் வர்ணங்களுடயவை (அக்ஷரங்களுடையவை,) வர்ணங்கள் இந்த 8 - ஸ்தானங்களில் (ஆகாசப்பிரதேசங்களில்) சம்பந்தப் படுகின்றன. "எட்டு ஸ்தானங்களை ஆசிரயித்துக் கொண்டும்" என்று ஆசாரியார் சொன்னதானது வர்ணங்களின் உபாதான காரணம் ஆகாசம் என்பதைக் குறிப்பிடுகிறது.

61. எத்தனை எழுத்துக்கள் எந்தக்கிரமமாகச் சேர்க்கப்பட்டு எந்த அர்த்தத்தை பிரசித்தமாய் விளக்கி வைக்கின்றனவோ, அந்த அர்த்தத்தை அந்த வர்ணங்களே விளக்கி வைக்கின்றன. உதாரணம் :— "பசு" என்கிற பதத்தில் "ப் அச் உ" என்கிற அக்ஷரங்களிருக்கின்றன. இவைகளில் முதலில் "ப" பிறகு "சு" இந்தக் கிரமமக இந்த அக்ஷரங்களைச் சேர்க்க "பசு" என்னும் பதமாகி, பசு என்னும் மிருகத்தை புத்திக்கு இச்சேர்க்கை விளக்கிவைக்கிறது.

ச-பா:—சொல்லப்படுகின்றன. அல்லது 62 அப்படி சேர்க்கப்பட்ட வர்ணங்களால் பிரகாசிக்கும் பதஸ்போடம் 63 வாக்கு எனப்படும். இந்தபதமே வாக்கு. இதற்குப் பிரமாணமான சுருதிவசனம்:—

अकारोवै सर्वावाक्सैषास्पर्शान्तस्थोष्माभि
र्व्यज्यमानाबह्वीनानारूपाभवति

அகாரோவை ஸர்வாவாக்ஸைஷா ஸ்பர்சாந்தஸ்தோஷ்மபி
ர்வ்யஜ்யமானாபஹ்வீ நாநாரூபாபவதி

இதிலுள்ள ஓங்காரத்தால் குறிப்பிடப்படும் ஸ்போடமென்னும் பெயருள்ள சித்சக்தி சகல வாக்காகின்றது. அதுவே ஸ்பர்

---

து-பா:—पश्यति யேந வாக் அப்யுத்யதே யேந சக்ஷூம்ஷி பச்யதி முதலிய 4-வாக்கியங்களால் சொல்லுகிறார்.

---

62. இதுவரையிற் சொன்னது ஒருவித சேர்க்கையுள்ள வர்ணங்களையே பதமாக ஒப்புக்கொள்ளும் வர்ணவாதி மதம். மேற்சொன்ன வர்ணங்களால் பிரகாசம் செய்யப்படும் ஸ்போடமே ஒருவிதமான அர்த்தத்தைத் தெரிவிக்கும் என்பது ஸ்போடவாதி மதம். இது இப்போது சொல்லப்படுகிறது.

63. பதம்=ஸ்போடம். स्फुट्यते व्यज्यतेवर्णैः इति ஸ்புட்யதே வ்யஜ்யதே வர்ணை: இதி அதாவது வர்ணங்களால் வியக்தமாக்கப் பட்டது.

சாயணாசாரியாருடைய சர்வதர்சன சங்கிரஹத்தில் ஸ்போடத்தின் லக்ஷணம் எப்படி சொல்லப்பட்டிருக்கிறதெனின் :—वर्णातिरिक्तो वर्णाभिव्यङ्ग्योऽर्थप्रत्यायको नित्यः शब्दः வர்ணாதிரிக்தோ வர்ணாபிவ்யங்க்யோऽர்த்தப்ரத்யாயகோ நித்ய: ஶப்த: அதாவது வர்ணங்களை விடவேறாயும், வர்ணங்களால் வியக்தமாக்கப் படுவதாயும், அர்த்தத்தைப் போதிக்கிறதாயுமிருக்கிற நித்தியசப்தமே ஸ்போடமெனப்படும். ஸ்போடத்துக்குப் பிரமாணமென்னவெனின் ஒரேரூபமான பதம்முதலிய புத்திக்கு ஒரே ஆசிரயமிருக்கவேண்டும், அநேக அக்ஷரங்கள் விஷயங்களாகமாட்டா. பசுமுதலிய பதம் ஒரே ரூபமாயிருக்கிறதென்கிற புத்திப் அச் உ முதலிய அநேக அக்ஷரங்களை ஆசிரயிக்கமாட்டாது. அந்த புத்திக்கு ஆசிரயம் ஒன்ருக இருக்கவேண்டும். அந்த ஒரு ஆசிரயம் ஸ்போடம் இது வர்ணங்களைவிட வேருயும், கேவலம் த்வனி மாத்திரமாயும் நித்தியமாயுமிருக்கிறது. நையாயிகர்கள் ஸ்போடத்தை ஒப்புக் கொள்ளுகிறதில்லை. சிலர் ஒப்புக்கொண்டாலும் வர்ணங்கள்போல் அதை அநித்தியமாகப் பாவிக்கிருர்கள். ஸ்போடத்தைபற்றி பிர்ம்ம சூத்திரம் I - 3 - 28ன் சங்கரபாஷ்யத்தைப் பார்க்க.

ச-பா:—சம் 64, அந்தஸ்தம் 65, ஊஷ்மம் 66 என்னும் வர்ணங்களால் பிரகாசமாகி அநேகரூபமாய் ஆகிறது). இந்த வாக்கு மித67 அமித,68 ஸ்வர 69 என்கிற ரூபமாயும் சத்தியம், 70 பொய், 71 என்கிற விகாரங்களுடன் கூடினதாயும், பதங்களால் பேதத்தை அடைந்தும் இருக்கிறது. இந்த வாக்கு வாக்கிந்திரியம் என்னும் குணத்துடன் 72 கூடியதாயிருக்கிறது. यत् वाचा अनभ्युदितं யத் வாசா அநப்யுதிதம்:— இப்படிப்பட்ட வாக்கினால் எந்த பிரம்ம ஸ்வரூபம் வர்ணிக்கபபடவில்லையோ, பிரகாசிப்பிக்கப்படவில்லையோ,

येन वाक् अभ्युद्यते யேந வாக் அப்யுத்யதே:—எந்தப் பிரம்மமாகிற சைதன்னிய ஜ்யோதியால் அந்த இந்திரியத்தோடுகூடின வாக்கு அர்த்தத்தைக் குறிப்பிடும்படி செய்யப்படுகிறதோ அதாவது சொல்லவேண்டிய அபிப்பிராயத்தைச் சொல்லிக்காட்டும்படி பிரேரணை செய்யப்படுகிறதோ இந்த அர்த்தம் यद्वाचोहवाक् யத்வா

---

வி-பா:—येन யேந = எதினால்
वाक् வாக் = வாக்கு முதலியவைகள்
अभ्युद्यते அப்யுத்யதே = பிரகாசிப்பிக்கப் படுகின்றனவோ

---

து-பா:—येन யேந = எதினால் பிரேரணை செய்யப்பட்டதாய்
वाक् வாக் = வாக்கானது (சப்தமானது)
अभ्युद्यते அப்யுத்யதே = ஜீவர்களால் உச்சரிக்கப் படுகிறதோ
இதனால் சர்வஞ்ஞத்துவ லக்ஷணம் சொன்னதாக ஆகிறது.

---

64. क க முதல் म ம வரையிலுள்ள 25 அக்ஷரங்கள் ஸ்பர்சமெனப்படும்.

65. य-र-ल-व ய-ர-ல-வ இந்த நான்கு எழுத்துகளும் அந்தஸ்தம் எனப்படும்.

66. श-ष-स-ह ஶ-ஷ-ஸ-ஹ- இந்த நான்கு எழுத்துகளும் ஊஷ்மமெனப்படும்.

67. எதில் இத்தனை அக்ஷரங்கள் தான் சேரக்கூடியவை என்கிற நியமமுண்டோ, அந்த சந்தஸ், விருத்தம், பத்தியம், ரிக்முதலியவை மித மெனப்படும்.

68. இத்தனை அக்ஷரங்கள் தான் சேரவேண்டும் என்கிற நியமமில்லாத யஜுஸ்முதலிய சந்தஸ் அமிதமெனப்படும்.

69. கானப்பிரதானமான சாமவேதம் ஸ்வரமெனப்படும்.

70. உள்ளபடி வசனித்தல்.

71. உள்ளபடிக்கு விருத்தமாக வசனித்தல்.

72. குணம்=ஒருவஸ்துவை குறிப்பிடும் பதார்த்தம்,

8

ச-பா:—வொஹவாசஃ என்று இந்த உபநிஷத்தின் 2 - வது மந்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும்

"यं वाङ् नवेद यस्य वाक् शरीरं यो वाचमन्तरो यमयति ॥बृ III-7-17

யம் வாங் நவெதயஸ்ய வாகு ஶரீரம்
யொவாசமம்தரொயமயதி ॥ ப்ரு III-7-17

(அர்த்தம்:—வாக்கு எதை அறியவில்லையோ வாக்கு எதற்குச் சரீரமோ எது உள்ளே யிருந்துகொண்டு வாக்கை நியமனம் செய்கிறதோ என்று வாஜஸநேயத்தில் சொல்லி யிருக்கிறது.

"या वाक् पुरुषेषु सा घोषेषु प्रतिष्ठिता कश्चित्तांवेदब्राह्मणः73" யா வாகு புருஷெஷு ஸா கொஷெஷுப்ரதிஷ்டிதா கஶ்சித்தாம் வெத ப்ராஹ்மணஃ 73 அதாவது எந்த வாக்கு சேதனரூப பிராணிகளிடத்திலிருக்கிறதோ அது அக்ஷரங்களில் இருக்கிறது; அதாவது அக்ஷரங்கள் அதை வியக்தமாக்குகின்றன; அதை யாதாரொருபிராமணன் யதார்த்தமாக அறிகிறான். இப்படி கேள்விகேட்டு பிரதி உத்தரம் சொல்லப்படுவதாவது:—सा वाक् यया स्वप्ने भाषते 73 ஸா வாகு யயா ஸ்வப்நெ பாஷதெ 73 அதாவது "எதினுடைய சம்பந்தத்தால் ஸ்வப்ந காலத்தில் வசனிக்கிறானோ அது வாக்கு" அது வசனிக்கிறவனுடைய வசனிக்கும் சக்தி, நித்தியமாயும் சைதன்னிய 74 ஜ்யோதி

---

73. இந்த சுருதிகள் எந்த சாகையைச் சேர்ந்தனவோ தெரியவில்லை

74. இந்த விஷயம் பிரஹதாரணயத்தில் பாஷ்யகாரரால் வியக்தமாய்ச்சொல்லப்பட்டிருக்கிறது. அது எப்படியெனின்:—

**சங்கை**:—ஆத்மா கேவலம் ஏகமாயும் சைதன்னிய ரூபமாயுமிருந்தால், எப்படி உஷ்ணரூபமான அக்கினி தன்னுடைய ஸ்வபாவத்தை எக்காலத்திலும் விட்டு விடவில்லையோ, அப்படி ஆத்மாவும் தன்னுடைய ஞானரூபஸ்வபாவத்தையும் எப்போதும் விடக்கூடாது. விடவில்லையே எனின், சுஷுப்தி காலத்தில் ஏன் ஆத்மா அறிகிறதில்லை, பார்க்கிறதில்லை, பேசுகிறதில்லை, ஒன்றும் செய்கிறதில்லை. ஞானம் எதற்கு ஸ்வபாவமோ அது அறியாமலிருப்பது விருத்தம்.

**சமாதானம்**:—ஞானஸ்வபாவமும் சுஷுப்தி காலத்தில் அறியாமையும் விருத்தங்களல்ல. சுஷுப்திகாலத்தில் ஆத்மா பார்க்கிறதில்லை, பேசுகிறதில்லை என்று சொல்வது பொருந்தாது. ஏனெனின் அக்காலத்தில் பார்க்கிறவனும் பேசுகிறவனுமான ஆத்மா இருக்கிறான். எப்போது கண், வாக்கு, மனது முதலியவை வியவஹரிக்கின்றனவோ அப்போது தான் பார்க்கிறான், பேசுகிறான் என்கிற வியவஹாரம் உண்டாகிறது. சுஷுப்தியிலோ இந்த வியவஹாரம் யாதொன்றும் காணப்படவில்லை. ஆகையால் ஆத்மா பார்க்க

ச-பா—ரூபமாயு மிருப்பது. ஏனெனின் नाहिवक्तुर्वक्तेर्विपरिलोपोविद्यते நஹி வக்துர்வக்தேர்விபரிலோபோ வித்யதே (பிர-4-3-26) அதாவது வசனிக்கிறவனுடைய வசனிக்கும் சக்தி ஒருக்காலும் நாசமாகிறதில்லை என்று சுருதி சொல்லுகிறது.

तदेवब्रह्मत्वं विद्धि ததேவப்ரஹ்மத்வம்வித்தி அந்த ஆத்ம ஸ்வரூபத்தையே பிரம்மம் என்று நீ அறி.

---

வி-பா:—तत् एव தத் ஏவ = அதுவே
ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம் என்று
त्वं த்வம் = நீ
विद्धि வித்தி = அறி




---

வில்லை, பேசவில்லை என்று பூர்வபக்ஷி நினைப்பது பொருந்தாது. சுஷுப்தியிலும் பார்க்கிறவனும் பேசுகிறவனுமிருக்கிறான். எப்படி அக்கினியின் உஷ்ணத்தன்மை அக்கினி இருக்கும் வரையில் இருக்கிறதோ, அப்படியே பார்க்கிறவனுடைய பார்வையும் பேசுகிறவனுடைய பேசும்சக்தியும் பார்க்கிறவனும் பேசுகிறவனும் இருக்கிறவரையில் மறைந்து விடுகிறதில்லை. பார்க்கிறவனும் பேசுகிறவனும் இருக்கிற ஆத்மா விநாசமற்றவன். அப்படியே அவனுடைய பார்வையும் பேசுதலும் விநாசமற்றவையே. அந்த சைதன்னிய ஜ்யோதிரூப் பார்வையாலும் வாக்கினாலும் அவன் சுஷுப்திகாலத்திலும் பார்க்கிறவனாகவும் பேசுகிறவனாயும் இருக்கிறான். ஆனால் ஏன் பார்க்கிறதில்லை, பேசுகிறதில்லை எனின் சொல்லுகிறேன் :—சுஷுப்திகாலத்தில் ஆத்மாவுக்கு அன்னியமானபார்க்கும்படியானதும்சொல் வசனிக்கும்படியானதுமான விஷயம் யாதொன்றுமில்லை. பார்வை, வசனித்தல் முதலியவைகளுக்குக் காரணமான அந்தக்கரணம், கண், ரூபம், வாக்கு, முதலியவை அவித்தையால் வெவ்வேறாகக் காணப்படுகின்றன. சுஷுப்தி காலத்தில் எல்லாம் ஒன்றாய் விடுகின்றன. ஏனெனின் ஆத்மா பர (பிராஞ்ஞ) ரூபத்துடன் சேர்ந்து விடுகிறான். திர்ஷ்டா வக்தா பரிச்சின்னனாயிருக்கும் போது அவனுக்கு பார்வை முதலியவைகள் சம்பவிக்கும் பொருட்டு இந்திரியங்கள் வெவ்வேறாய் ஏற்படுகின்றன. அந்த திருஷ்டாவே பரரூபத்துடன் சேர்ந்த மாத்திரத்தில் அபரிச்சின்னனாகிறான். அக்காலத்தில் இந்திரியங்களும் விஷயங்களும் வெவ்வேறாய்க் காணப்படுகிறதில்லை. இந்த இந்திரியங்களில்லாத போது விசேஷ பார்வை முதலியவைகளுமில்லை. இந்த விசேஷ பார்வை முதலியவை இந்திரியங்களால் உண்டாகின்றன, ஆத்மாவால் உண்டாகவில்லை; ஆத்மாவால் உண்டாவதாக மட்டும் தோன்றுகிறது. அதினால் ஆத்மாவின் பார்வையும் பேசும் சக்தியும் மறைபட்டுப்போவதாக பிராந்தி உண்டாகி வாஸ்தவத்தில் அப்படியில்லை. ஆத்மாவின் திர்ஷ்டியும் வசன்சக்தியும் நித்தியமாயும் சைதன்னியஜ்யோதி ரூபமாயுமிருக்கிறது.

ச-பா:—ब्रह्म ப்ரஹ்ம பிரம்மம் என்றால் எதைவிடப் பெரிதானது யாதொன்றுமில்லையோ, எதற்கு பூமா 75 என்று பெயரோ, எது எங்கும் நிறைந்திருக்கிறதோ அது வாக்குக்கு வாக்கு, கண்ணுக்குக் கண், சுரோத்திரத்துக்குச் சுரோத்திரம், மனதிற்கு மனது, கர்த்தா, போக்தா, விஞ்ஞாதா, நியமனம் செய்கிறவன், விஞ்ஞானகந்தப் பிரம்மம், இப்படி வியவஹாரம் எந்த வாக்கு முதலிய உபாதிகளால், வாஸ்தவத்தில் எது வியவஹார விஷயமன்றோ, எதினிடத்தில் யாதொரு விசேஷ தர்மங்களுமில்லையோ, எது பரசாம்மிய ரூபமோ, அப்படிப்பட்ட பிரம்மத்தினிடத்தில் இருக்கின்றதோ அந்த வாக்குமுதலிய உபாதிகளைத் தள்ளிவிட்டு, ஆத்மாவையே விசேஷமற்ற பிரம்மரூபமாக அறி என்பது एव ஏவ சப்தத்தின் அர்த்தம்.

ने...उपासते நே...உபாஸதே:—எதை உபாசிக்கிறார்களோ அதாவது தியானிக்கிறார்களோ அதாவது உபாதிபேதங்களோடு கூடிய அனாத்மாவான ஈசுவராதிகளை இது என்று உபாசிக்கிறார்களோ அதாவது தியானிக்கிறார்களோ அந்த ஈசுவராதிகள் 76 ஆத்

---

வி-பா:—यत् யத் = எந்தவஸ்துவை

इदं (इति) இதம் (இதி) = இது என்று, இது என்கிற ஞானத்திற்கு விஷயமாய் கரதலாமலகம் (உள்ளங் கையிலுள்ள நெல்லிக்கனி) போல நன்றாய் அறிவதாய்

(जनाः) उपासते (ஜநா:) உபாஸதே = ஜனங்கள் உபாசிக்கிறார்களோ

---

து-பா:—यत् इदं யத் இதம் = எந்த இது

ते தே = உன்னுடைய

उप உப = சமீபத்தில்

---

75. எது எல்லாவற்றையும்விட பெரிதோ அது சுகம். அதைவிட குறைவானது அல்பம், சுகமற்றது. எல்லாவற்றைவிட பெரியதான சுகம் அடையப்பட்டிருந்தால், அதைவிட அதிகமானது யாதொன்றுமில்லாத படியால் துக்கத்தின் பீஜமும் அதிக சுக இச்சையும் இல்லாமற் போகின்றன. அந்த பூமாவின் (நிரதிசயமான சுகஸ்தானத்தின்) ஞானம் கிடைக்க வேண்டும். எவ்விடத்தில் வேறு ஒன்றும் பார்க்கப்படவில்லையோ கேட்கப்படவில்லையோ, அறியப்படவில்லையோ அதுவே பூமா - (சா - 7 - 23 24.)

76. உபாதிபேதத்தால் ஈசுவரன் உபாசியன் என்று கற்பிதனானாலும், இவ்விடத்தில் உபாதியுள்ள சகலும் உபாசிக்கத்தக்கதல்ல என்று சொல்லப்பட்டிருக்கிறது.

சபா:—மாவின் ஸ்வரூபமான பிரம்மமல்ல. तदेवब्रह्मत्वं विद्धि தடெ³வ ப்³ரஹ்மத்வம் வித்³தி (அதுவே பிரம்மம் என்று நீ அறி) இப்படிச் சொல்லியிருந்தும், नेदंब्रह्म நேத³ம்ப்³ரஹ்ம (ஆத்மா தவிர யாவும் அப்பிரம்மம்) என்று சொன்னது ஆத்மாவையே பிரம்மம் என்று நினைக்கவேண்டுமென்கிற நியமத்தின்பொருட்டாம். [77] அல்லது மற்றவிடங்களில் பிரம்ம புத்தி வைக்காமலிருக்கவேணும் என்னும் परिसंख्या பரிஸங்க்²யா என்பதின்பொருட்டாம் என்று அறியத்தக்கது. ॥ 4 ॥

---

வி-பா:—इदं இத³ம் = இது
(ब्रह्म ப்³ரஹ்ம = பிரம்மம்)
न ந = அல்ல. ॥ 4 ॥

---

து-பா:—आस ஆஸ = இருக்கிறதோ அதாவது உன்னை நியமனம் செய்வதாக இருக்கிறதோ आस ஆஸ — என்பது வினைச்சொல்போன்ற அவ்வியபதம். तेआस தெ ஆஸ = என்பதை आसते ஆஸதே ஆஸ்தே = என்று ஒரேபதமாய் பாவிக்கிறார்.

तत् एव தத் ஏவ = அதுவே
ब्रह्म ப்³ரஹ்ம = பிரம்மம் என்று
त्वं த்வம் — நீ

विद्धि வித்³தி=அறி ஹிருதயாகாசாதிகளும் சமீபத்திலிருப்பதால் அவைகளையும் பிரம்மம் என்று சொல்லலாமே எனின், அவைகள் நியாமகர்களாக இல்லாதபடியால் அவைகளைப் பிரம்மமாகச் சொல்லக்கூடாது.

इदं இத³ம் = இந்த ஜீவஸ்வரூபமே அந்தப் பிரம்மம் என்று
न ந = அறியவேண்டாம். அப்படி அறிந்தால் அந்த அறிவு பொய்யான அறிவானதால் அநர்த்தத்துக்குக்காரணமாகும் என்று அர்த்தம். இந்த லக்ஷணத்தைச் சொன்னதின் பிரயோசனம் ஜீவபேத ஞானம்.

---

77. விதிவசனங்கள் மூன்றுவகை:—(1) அபூர்வவிதி. (2) நியமவிதி (3) பரிசங்கியாவிதி. I. இதரப்பிரமாணங்களால் தெரியவராத விஷயத்தைச் சொல்லும் விதி அபூர்வவிதி எனப்படும். உதாரணம்:— यजेतस्वर्गकामः யஜேத ஸ்வர்க³காம: அதாவது ஸ்வர்க்கத்தை இச்சிக்கிறவன் யாகம் செய்யவேண்டியது. ஸ்வர்க்க பிராப்தியின் பொருட்டு யாகம் செய்தல் இதர பிரமாணங்களால் தெரியவராதபடியால் இந்த வசனம் அபூர்வவிதி

து-பா:—இந்த மந்திரத்துக்கும் கண்டம்முடியும் வரையிலும் பிரமாணவாக்கியங்கள் :—

प्राणादीनांप्रणेताच सर्ववेत्ताचसर्वशः ।
नेदं जीवस्वरूपंतद्ब्रह्मविष्ण्वाख्यमव्ययम् ।
किन्तुयत्तेसमीपस्थ मास्ते विनियामकम् ।
तदेवब्रह्मत्वं विद्धिविष्ण्वाख्यं परमव्ययम् ।
नियामकं तद्देवानां मर्त्तानां किमुतोत्तमम् ।
तत्प्रसादंविनाजीवेमंतव्यानप्रवृत्तयः ।
किमुजीवस्य तद्भावेन मंतव्य इतीर्यते ॥

ப்ராணாதீநாம் ப்ரணேதாச ஸர்வவேத்தாசஸர்வச: ।
நேதம்ஜீவஸ்வரூபம்தத்ப்ரஹ்மவிஷ்ண்வாக்யமவ்யயம் ।
கிந்துயத்தேஸமீபஸ்தமாஸ்தே விநியாமகம் ।

---

எனப்படும். II. இரண்டு காரணங்களால் ஒரு விஷயம் சித்திக்கு மிடத்தில், ஒரு காரணத்தால் அந்த விஷயம் நிறைவேற வேண்டும் என்று சொன்னால், மற்றொரு காரணத்துக்கு இடமில்லை. அப்போது ஒன்றைக்கொண்டே அந்தக் காரியத்தை நிறைவேற்ற வேண்டும் என்பது நியமவிதி. உதாரணம் :—व्रीहीनवहन्ति வ்ரீஹீநவஹந்தி = நெல்குத்தவேண்டும். நெல்லின் உமியை நகத்தால் எடுக்கலாம், அல்லது உரலில்குத்தி எடுக்கலாம். நகத்தால் உமியைப் பிரிக்கிற இடத்தில் குத்தி எடுத்தல் என்கிற வார்த்தை கிடைக்கவில்லை. வியக்தமாய் குத்தி எடுப்பதானது விளங்கும் பொருட்டு "நெல்லை குத்த வேண்டும்" என்று ஏற்படும் விதி நியமவிதியாம். பிரகிருதத்தில் பிர்ம்மபுத்தியை ஆத்மாவிலும் அநாத்மாவிலும் செய்யலாம். அநாத்மாவை விட்டு ஆத்மாவிலேயே செய்யவேண்டும் என்பது நியமவிதி. III. ஒரு வஸ்துவிலும் வேறு ஒன்றிலும் ஒரு காரியம் பிராப்தமாயிருக்க, ஒன்றில் காரியம் செய்யவேண்டுமென்று சொல்லுவதால் மற்றொன்றில் செய்யக்கூடாதென்று ஏற்படும் விலக்குவிதி பரிசங்கியாவிதி எனப்படும். உதாரணம் :—पंचपंचनखा: भक्ष्या: பஞ்ச பஞ்ச நகா: பக்ஷ்யா: என்னுமிடத்தில் இச்சையால் குறிப்பிட்ட 5-நகங்களுடைய 5 (முசல், ஆமை, உடும்பு, खड्गशल्लकी கட்கசல்லகீ) பிராணிகளும் வேறு குரங்கு முதலான பிராணிகளு முண்டு. இவ்விரண்டு வகைகளையும் இச்சையால் சாப்பிடும்படி யிருக்க, முசல் முதலியவைகளைச் சாப்பிடலாம் என்று சொன்னதினால் மற்றவைகளை விலக்க வேண்டுமென்பது தாற்பரியம். ஆகவே இந்த விலக்குக்கு பரிசங்கியாவிதி என்று பெயர். பிரகிருதத்தில் ஆத்மாவிலும் அநாத்மாவான ஈசுவராதிகளிடத்திலும் பிரம்மபுத்தி பிராப்தமாயிருக்க அநாத்மாவில் பிர்ம்மபுத்தியை விலக்குவது பரிசங்கியாவிதியாம்.

### 5-வது மந்திரம்.

यन्मनसानमनुते येनाहुर्मनोमतं ।
तदेवब्रह्मत्वंविद्धि नेदंयदिदमुपासते ॥

யந்மநஸா நமநுதே யேநாஹுர்மநோமதம் ।
ததேவ ப்ரஹ்மத்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ॥

(लोकः லோகः — ஜனங்கள்)

यत् யத் = எதை

मनसा नमनुते மநஸா நமநுதே = மனதினால் சங்கற்பிக்க வில்லையோ அல்லது நிச்சயிக்கவில்லையோ

येन யேந = எதினால்

मनः மநः = மனது

---

வி-பா:— मनसा மநஸா = மனதினால்

यत् யத் = எது

नमनुते நமநுதே = மனனம் செய்கிறதில்லையோ

येन யேந = எதினால்

मनः மநः = மனது

---

து-பா:— ததேவ ப்ரஹ்மம் வித்தி விஷ்ணவ்யம் வாமேவ்யயம்।
நியாமகம் ததேவாநாம் மர்த்யாநாம் கிமுதேதராம் ।
தஸ்ய ப்ரஹ்மம் வி நாஜீவே மம் தவ்யாநவ்யவ்யயம் ।
கிமுஜீவஸ்ய தத்ஜ்ஞானேந மந்தவ்யம் ஜதீயதே ॥

சிலர் तदेवब्रह्म ததேவப்ரஹ்ம என்பதை நிர்க்குணப் பிரம்மபரமாக அர்த்தம் செய்கிறார்கள். அப்படி அல்லவென்பதைக் காட்டும் பொருட்டு विष्णवाख्यं விஷ்ணவாக்யம் என்னும் பதம் பிரயோகிக்கப் பட்டிருக்கிறது. பிரம்மம் ஜீவஸ்வரூபம் அல்லவென்று சொன்னதற்குக் காரணமென்னவெனில் श्रोत्रस्य श्रोत्रं ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் முதலிய வசனங்களால் தேவதைகளையும் (ஆனதால் மனிதர்களையுங்கூட என்று அர்த்தம்) நியமனம் செய்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. நியமனம் செய்கிறவனும், நியமனம் செய்யப் படுகிறவனும் ஒன்றல்ல. ॥ 4 ॥

यत् யத் = எதை

मनसा மநஸா = மனதினால்

(पुरुषः புருஷः = புருஷன்)

नमनुते நமநுதே = பூர்ணமாய் மனனம் செய்யவில்லையோ

येन யேந = எதனால் பிரேரணை செய்யப்பட்டதாய்

मनः மநः = மனதானது, மனதிற்கு விஷயமான பதார்த்த சமூகம்,

मतं மதம் = விஷயமாக்கப்படுகிறதோ அதாவது வியாபிக்கப் படுகிறதோ

तत् एव தத் ஏவ முதலிய பதங்களுக்கு 4—வது மந்திரத் திற்போல் அர்த்தம் செய்துக்கொள்ளவேண்டியது.

ச-பா—यत् [78] ...मनुते யத் [78] ...மநுதே = ஜனங்கள் எதை மனதினால் மனனம் செய்யவில்லையோ

मनः [79] மந: [79] = புத்தியும் மனதும் ஒன்றாக எடுக்கப்பட்டிருப் பதால் இவ்விடத்தில் மனது என்னும் பதத்தால் அந்தக்கரணம் என் று அர்த்தம் செய்யவேண்டியது. ஒருவன் எதினால் மனனம் (விசா ரம்) செய்கிறானோ அது மனது. இந்த மனது சகல இந்திரியங்களுக்

---

வி-பா:—मतं மதம் = மனனம் செய்கிறதென்று
(ज्ञानिनः ஜ்ஞாநிந: = ஞானிகள்
आहुः ஆஹு: = சொல்லுகிறார்களோ
तदेव ததேவ=முன்போலவே அர்த்தம் செய்துக்கொள்ளவும்

---

து-பா:—मत மதம் = அறியப்படுகிறதோ, மனதிற்கு விஷய மாக்கப்படுகிறதோ

(इतिज्ञानिनः இதிஜ்ஞாநிந: = இந்தப்பிரகாரம் ஞானிகள்)
आहुः ஆஹு: = சொல்லுகிறார்களோ
यत् इदं யத் இதம் = எந்த இது
ते தே = உன்னுடைய
उप உப = சமீபத்தில்
आस ஆஸ = இருக்கிறதோ, அதாவது உன்னை நியமனம் செய்வதா யிருக்கிறதோ
तत् एव தத்ஏவ = அதுவே
ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம் என்று
त्वं த்வம் = நீ
विद्धि வித்தி = அறி
इदं இதம் = இந்த ஜீவஸ்வரூபம் பிரம்மம் என்று
न ந = அறியவேண்டாம்.

---

78. கேனேஷிதம் பததிப்ரேஷிதம்மன: என்னும் கேள்விக்கு இந்த மந்திரம் உத்தரம்.

79. மனது என்பதினால் பாஹ்ய இந்திரியங்களுக்கு எதிரடையான அந்த ரிந்திரியமான கேவல மனது என்று அறியத்தக்கதல்ல. ஆனால் மனது புத்தி இவைகளை அடக்கிக்கொண்டிருக்கும் அந்தக்கரணம் என்று அறிய வேண்டியது.

6-வது மந்திரம்.

यच्चक्षुषा न पश्यति येन चक्षूंषि पश्यति ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥

யச்சக்ஷுஷா நபஶ்யதி யேந சக்ஷூம்ஷிபஶ்யதி ।
ததேவப்ரஹ்மத்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ॥

ச-பா—கும் சமமாயிருக்கிறது, சகல விஷயங்களிலும் வியாபிக்கிற படியால். இதற்குச் சுருதிப்பிரமாணம்:—

काम: संकल्पो विचिकित्सा श्रद्धाऽश्रद्धा धृतिरधृतिर्ह्रीर्धीर्भीरित्येतत्सर्वं मन एव(बृह I-5-3)

காம: ஸங்கல்போ விசிகித்ஸா ஶ்ரத்தாऽஶ்ரத்தா த்ருதிரத்ருதிர்ஹ்ரீர்தீர்பீரித்யேதத்ஸர்வம் மந ஏவ ॥ ப்ருஹ I-5-3)

(இதற்கு அர்த்தம்):—ஸ்திரீ விஷயமாய் இச்சை, சங்கற்பம், சம்சயம், சிரத்தை (அதாவது எந்த கர்மத்தின் பலன் இந்த லோகத்தில் காணப்படவில்லையோ அதில் ஆஸ்திக்கிய புத்தி), அசிரத்தை (நாஸ்திக புத்தி), தைரியம், அதைரியம், லஜ்ஜை, நிச்சய புத்தி, பயம், இவைகளெல்லாம் மனதே, அதாவது, அந்தக்கரணத்தின் விர்த்தி பேதங்களே. அந்த மனதினால் அதாவது சுருதியில் சொல்லிய காமம் முதலிய விர்த்திபேதங்களுடன்கூடின மனதினால்

**यत्!** யத்=மனதைப் பிரகாசிப்பிக்கும் சைதன்னிய ஜ்யோதிஸ்

**नमनुते** நமநுதே = ஜனங்களுடைய சங்கற்பத்துக்கும் நிச்சய புத்திக்கும் விஷயமாகிறதில்லை. ஏனெனின் அந்த சைதன்னிய ஜ்யோதிஸ் மனதையும் பிரகாசிப்பிக்கிறது, சகல விஷயங்களிலும் மனதை நியமனம் செய்கிறது. ஆத்மா சகல பதார்த்த ஸ்வரூபமா யிருப்பதால் ஆத்ம ஸ்வரூபத்தினிடத்தில் அந்தக்கரணத்திற்குப் பிரவிர்த்தி உண்டாகமாட்டாது,

**येन ... मतं** யேந...மதம் :—உள்ளிருக்கும் சைதன்னிய ஜ்யோதியால் பிரகாசிப்பிக்கப்பட்டதால் மனதிற்கு மனனம் செய்யும் சாமர்த்தியம் உண்டாயிருக்கிறது. ஆகவே காமசங்கற்ப முதலிய விர்த்திகளுடன்கூடின மனதை பிரம்மம் விஷயமாக்குகிறது, அதாவது வியாபிக்கிறது என்று ஞானிகள் சொல்லுகிறார்கள்.

**तदेव...विद्धि** ததேவ...வித்தி —உள்ளிருந்து மனதை எது நடத்திவைக்கிறதோ அதுவே பிரம்மம் என்று நீ அறி.

**नेदं...उपासते** நேதம்...உபாஸதே = உபாசியமானது பிரம்மமல்ல. இந்த விஷயம் முன் மந்திரத்திற் சொல்லியபடி அறியத்தக்கது. ॥ 5 ॥

ச-பா:—(लोक: லொகஃ = ஜனங்கள், உலகம்)

यत् யத் = எதை

चक्षुषा சக்ஷுஷா = நேத்திரத்தால்

नपश्यति நபஶ்யதி = பார்க்கிறதில்லையோ

येन யெந = எதினால்

चक्षूंषि சக்ஷூம்ஷி = நேத்திரங்களை

पश्यति பஶ்யதி = பார்க்கிறதோ

तत् एव தத் ஏவ = முதலிய பதங்களுக்கு முன்போலவே அர்த்தம்.

यत् [80] पश्यति யத்[80]...பஶ்யதி:—அந்தக்கரண விர்த்தியுடன் கூ

வி-பா:—चक्षुषा சக்ஷுஷா = கண்ணால்

यत् யத் = எது

नपश्यति நபஶ்யதி = பார்க்கிறதில்லை

येन யெந = எதினால்

चक्षूंषि சக்ஷூம்ஷி = கண்கள்

पश्याति = पश्यंति பஶ்யதி பஶ்யம்தி = பார்க்கின்றனவோ-முன் பின் அனுசரித்து இப்படித்தான் அர்த்தம் செய்யவேண்டியது.

तदेव தெதெவ ... முன்போலவே அர்த்தம் செய்துக் கொள்ளவும். ॥ 6 ॥

## 6 - வது மந்திரம்.

து-பா:—यत् யத் - எதை

चक्षुषा சக்ஷுஷா = கண்ணால்

(पुरुष:= புருஷஃ - புருஷன்)

नपश्यति நபஶ்யதி = பார்க்கவில்லையோ,

येन யெந = எதினால் பிரேரணை செய்யப்பட்டவைகளாய்

चक्षूंषि சக்ஷூம்ஷி = கண்கள், கண்களுக்கு விஷயமானவை ஜீவர்களால்

पश्यति பஶ்யதி = दृश्यते த்ருஶ்யதெ = பார்க்கப்படுகின்றனவோ.

यत् इदं யத் இதம் = எது

ते தெ = உன்னுடைய

उप உப = சமீபத்தில்

आस ஆஸ = இருக்கிறதோ, அதாவது நியமனம் செய்கிறதாயிருக்கிறதோ

तत् एव தத் ஏவ = அதுவே

ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம் என்று

त्वं த்வம் = நீ

विद्धि வித்தி = அறி.

इदं இதம் = இந்த ஜீவஸ்வரூபம் பிரம்மம் என்று

न ந = அறியவேண்டாம். ॥ 6 ॥

80. சக்ஷுஃ க உ தெவோ யுநக்தி என்னும் கேள்விக்கு இது உத்தரம்

7-வது மந்திரம்.

यच्छ्रोत्रेण नशृणोति येन श्रोत्रमिदं श्रुतम् ।
तदेवब्रह्मत्वंविद्धि नेदं यदिदमुपासते ॥
யச்ச்ரோத்ரேண நஶ்ருணோதி யேந ஶ்ரோத்ரமிதம் ஶ்ருதம்।
ததேவப்ரஹ்மத்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ॥
(लोक: லோக: = உலகம்)
यत् யத் = எதை
श्रोत्रेण ஶ்ரோத்ரேண = சுரோத்திரேந்திரியத்தால்
न शृणोति ந ஶ்ருணோதி = கேட்கவில்லையோ
येन யேந — எதனுல்
इदं இதம் = இந்த
श्रोत्रं ஶ்ரோத்ரம் = சுரோத்திரம்
श्रुतं ஶ்ருதம் = கேட்கிறதாக ஆகிறதோ

ச-பா:—டின நேத்திரேந்திரியத்தால லோகம் எதைப் பார்க்கிறதில லையோ

येन...चक्षूंषि [81] पश्यति யேந சக்ஷூம்ஷி [81] பஶ்யதி:-எந்த ஜ்யோதியால் அந்தக்கரணபேதத்தால் பேதப்படும் நேத்திரவிருத்திகளைலோகம் பார்க்கிறதோ,

तदेव...उपासते ததேவ...உபாஸதே :—அதுவே பிரம்மம் என்று நீ அறி; லோகம் உபாசிக்கிற ஈசுவராதிரூபம் பிரம்மமன்று ॥ 6 ॥

7-வது மந்திரம்.

வி-பா:—श्रोत्रेण ஶ்ரோத்ரேண = காதால்
यत् யத் = எது
नशृणोति நஶ்ருணோதி = கேட்கவில்லையோ
येन யேந = எதினுல்
इदं இதம் = இந்த
श्रोत्रं ஶ்ரோத்ரம் = காது
श्रुतं ஶ்ருதம் = கேட்கிறதோ

7 - வது மந்திரம்.

து-பா:—यत्; யத் = எதை
श्रोत्रेण ஶ்ரோத்ரேண = காதினுல்
(पुरुष: புருஷ: = புருஷன்)
नश्रृणोति நஶ்ருணோதி = பூர்ணமாய்க் கேட்கவில்லையோ
येन யேந = எதனுல் பிரேரணை செய்யப்பட்டதாய்
इदं இதம் = இந்த
श्रोत्रं ஶ்ரோத்ரம் = காது, காதுக்கு விஷயமான வஸ்து
श्रुतं ஶ்ருதம் = கேட்கப்படுகிறதோ

81. நேத்திரங்களின் அநேக விர்த்திகளை உத்தேசித்து சக்ஷூம்ஷி என்னும் பன்மை பிரயோகிக்கப்பட்டது.

8 - வது மந்திரம்.

यत्प्राणेन नप्राणितियेन प्राण: प्रणीयते ।
तदेवब्रह्मत्वं विद्धिनेदं यदिदमुपासते ॥

யத்ப்ராணேந நப்ராணிதி யேந ப்ராண: ப்ரணீயதே।
ததேவ ப்ரஹ்மத்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ॥

(लोक: லோக: = உலகம்)

यत् யத் = எதை

प्राणेन ப்ராணேந = கிராண இந்திரியத்தால்

न प्राणिति நப்ராணிதி = கந்தத்தைப்போல் விஷயமாக்கவில்லையோ

येन யேந = எதினல்

ச-பா:— तदेव ததேவ = முதலிய பதங்களுக்கு முன்போலவே அர்த்தம்.

श्रोत्रं ஶ்ரோத்ரம் என்பது:—எதற்குத்திக்குகள் தேவதைகளோ, எது ஆகாசத்தின் காரியமோ, அப்படிப்பட்ட மனோவிர்த்தியுடன்கூடின கர்ணேந்திரியம் (காது).

यत् [82]...शृणोति யத்[82]...ஶ்ருணோதி = இந்த கர்ணேந்திரியத்தால் ஜனங்கள் எதை விஷயமாக்கவில்லையோ அதாவது கேட்கவில்லையோ.

येन...श्रुतं யேந...ஶ்ருதம்:—சைதன்னியாத்ம பிரகாசத்தால் இந்த பிரசித்தமான கர்ணேந்திரியம் விஷயமாக்கப்படுகிறது.

तदेव ததேவ = முதலிய இரண்டாவது பதத்திற்கு முன்போலவே பாஷ்யார்த்தம். ॥ 7 ॥

வி-பா:—तदेव ததேவ ... முன்போலவே அர்த்தம். ॥ 7 ॥

8-வது மந்திரம்,

प्राणेन ப்ராணேந = பிராணனால்

यत् யத் = எது

नप्राणिति நப்ராணிதி = சலிக்கவில்லையோ

येन யேந = எதினல்

து-பா:—यत् इदं யத் இதம் முதல் முன்போல் அர்த்தஞ்செய்துகொள்ளவும். ॥ 7 ॥

8 - வது மந்திரம்.

यत् யத் = எது

प्राणेन ப்ராணேந = முக்கிய வாயுவால்

नप्राणिति நப்ராணிதி=சேஷ்டிக்க வில்லையோ ஆனல்தானே சேஷ்டிக்கிறதோ, இதனல், பரதந்திரம் என்பதனல் குறிப்பிடப்பட்ட சகல தோஷங்களற்றது என்னும் லக்ஷணம் சொல்லப்படுகிறது.

येन யேந = எதனல்

82. சுரோத்ரம் கஉ தேவோ யுநக்தி என்னும் கேள்விக்கு இது உத்தரம்

प्राणः ப்ராணஃ = கிராணேந்திரியம்

प्रणीयते ப்ரணீயதே = தன் விஷயத்திற் செலுத்தப்படுகிறதோ

तदेव ததேவ = முதலிய பதங்களுக்கு முன்போலவே அர்த்தம்.

ச-பா:—प्राणः ப்ராணஃ என்பது:—மூக்குத் துவாரங்களி லிருக்கிறதாயும் அந்தக்கரணம் பிராணன் இவைகளின் விர்த்தியுடன் கூடியும், பிருதிவீகாரியமாயு மிருக்கிற கிராணேந்திரியம்.

यत् [83] ...प्राणिति யத் [83] ...ப்ராணிதி = இந்த கிராணேந்திரியத்தால் ஜனங்கள் எதை கந்தம்போல் விஷயமாக்கவில்லையோ

येन ... प्रणीयते யேந ... ப்ரணீயதே = எந்த சைதன்னிய ஜ்யோதியால் பிரகாசிப்பிக்கப்படுகிற பிராணன் [84] (கிராணேந்திரியம்) தன் விஷயத்தில் பிரவேசிக்கிறதோ [85] (a)

तदेव ததேவ = முன்போலவே பாஷ்யார்த்தம். ॥ 8 ॥

முதலாவது கண்டம் முற்றிற்று.

---

வி-பா:—प्राणः ப்ராணஃ = பிராணன்

प्रणीयते ப்ரணீயதே = சலிக்கப் படுகிறதோ அதாவது மூச்சு இழுக்கிற, மூச்சுவிடுகிற ரூபமான வியாபாரத்தை அடைவிக்கப் படுகிறதோ.

तदेव ததேவ ... முன்போலவே அர்த்தம். ॥ 8 ॥

---

து-பா:—प्राणः ப்ராணஃ=முக்கியப் பிராணன்

प्रणीयते ப்ரணீயதே = பிரேரணை செய்யப்படுகிறதோ - சகலத்தையும் பிரேரணை செய்கிற பிராணனுக்கு நியாமகன் என்பதினால் சகல நியாமகன் என்கிற லக்ஷணம் ஏற்படுகிறது.

यत् इदं யத் இதம் முதல் முன்போல் அர்த்தம் செய்துக் கொள்ளவும்.

तथान्यप्रतिषेधात् ததாந்யப்ரதிஷேதாத் என்னும் (3-2-26) சூத்திரபாஷ்யத்தில் சொல்லியிருக்கிறதாவது :—வாசனுமயமான எதைத்தியானம் செய்கிறார்களோ அந்தவாசனுமயம் பிரம்மமன்று ஆனால் வாக்குக்கும் மனதிற்கும் விஷயமாகாமல் வாசனுமயத்திலிருக்கிறதே பிரம்மம் என்று அறி. ॥ 8 ॥

---

83. க உ ப்ராணஃ ப்ரைதியுக்தஃ என்னும் கேள்விக்கு உத்தரம்.

84. பிராணசப்தத்தால் பிராணனுடன் சம்பந்தப்பட்ட கிராணேந்திரியம் என்று அறியத்தக்கது. இரண்டாவது மந்திரத்தின் வியாக்கியானத்தைப் பார்க்க.

85. (a) 4 - முதல் 8 - வரையிலுள்ள மந்திரார்த்தத்தை பிருஹதாரணியகம் 3 - 8 - 11 லும் பார்க்கலாம்.

## II-வது கண்டம்.

9 यदिमन्यसे सुवेदेति दहरमेवापिनूनम् ।
त्वंवेत्थ ब्रह्मणोरूपं यदस्य त्वं यदस्य
देवेष्वथनुमीमांस्य मेवत मन्येविदितम् ॥ I ॥

9 யதி³மந்யஸே ஸுவேதே³தி த³ஹ்ரமேவாபிநூநம் ।
த்வம் வேத்த² ப்³ரஹ்மணோரூபம் யத³ஸ்ய த்வம் யத³ஸ்ய
தே³வேஷ்வத²நு மீமாம்ஸ்ய மேவத மந்யே விதி³தம் ॥ I ॥

(अहं அஹம் = நான்)

(ब्रह्मस्वरूपं ப்³ரஹ்மஸ்வரூபம் = பிரம்மஸ்வரூபத்தை)

सुवेदं ஸுவேத³ = நன்ருகத் தெரிந்துகொண்டேன்

इति இதி = என்று

त्वं த்வம் = நீ

मन्यसेयदि மந்யஸே யதி³ = நினைத்தால்

---

வி-பா:—9. சிஷ்யனை உத்தேசித்து यदिमन्यसे யதி³மந்யஸே முதல் ஆசாரியர் சொல்லுகிருர்.

(अहं அஹம் = நான்)

(ब्रह्मस्वरूपं ப்³ரஹ்மஸ்வரூபம் = பிரம்ம ஸ்வரூபத்தை)

सुवेद=सुष्टुवेद ஸுவேத³ = ஸுஷ்டு வேத³ = நன்ருய் அறிந்தேன்

इति இதி = என்று

मन्यसेयदि மந்யஸே யதி³ = நினைத்தாயானுல்

---

## 9 - வது மந்திரம்.

து-பா:—नोमनो நோமநோ (3-வது மந்திரம்) என்றுமன அபிமானி தேவதையால் பிரம்மம் அறியப்படமாட்டாது என்று சொன்னதானது அயுக்தம். ஏனெனின் பிரம்மம் இந்திராதிகளால் அறியப்படாமலிருந்தாலும், அது என்னுல் (ருத்திரனுல்) அறியப்படக்கூடியதே, என்கிற ருத்திரனுடைய இந்த சங்கையை இந்த மந்திரத்தில் பரிஹரிக்கிருர். பிரம்மம் பூர்ணமாய் அறியத்தக்கதல்லவென்று முன்சொன்ன அர்த்தத்தை यदिमन्यसे யதி³மந்யஸே முதலிய மந்திரங்களால் பிரம்மாவானவர் ஸ்பஷ்டமாக்குகிருர்.

(हेमहेश्वर ஹேமஹேஶ்வர = ஓ மகேசுவரரே)

सुवेद ஸுவேத³ = என்னைத்தவிர மற்றவர்கள் பிரம்மத்தைச் செவ்வையாக அறியவில்லை. நான் பிரம்மத்தைச் செவ்வையாக அறிகிறேன்.

इति இதி = என்று

यदिमन्यसे யதி³மந்யஸே = நினைத்திரேயானுல்.

ச-பா:—अस्य அஸ்ய = இந்த

ब्रह्मणः ப்ரஹ்மண: = பிரம்மத்தின்

यत् யத் = எந்த

रूपं ரூபம் = ரூபத்தை

वेत्थ வேத்த = அறிந்திருக்கிறாயோ

(तत् தத் = அது)

दहरंएव தஹரமேவ = அற்பமே

नूनं நூநம் = (இது) நிச்சயம்.

अस्य அஸ்ய = இந்த பிரம்மத்தின்

यत् யத் = எந்த

रूपं ரூபம் = ரூபத்தை

देवेषु தேவேஷு = தேவதைகளில்

वेत्थ வேத்த அறிந்திருக்கிறாயோ

---

வி-பா:—(नतत्तथा = நதத்ததா = அது அப்படி அல்ல)

अस्य அஸ்ய = இந்த

ब्रह्मणः ப்ரஹ்மண: = பிரம்மத்தின்

(इहलोके இஹலோகே = இந்த லோகத்தில்)

यत् अपि யத் அபி = எந்த

रूपं ரூபம் = ரூபத்தை

त्वं த்வம் = நீ

वेत्थ வேத்த = அறிகிறாயோ

(तत् தத் = அது)

नूनं நூநம் = நிச்சயமாய்

दभ्रम् एव தப்ரம் ஏவ = அற்பமே. (दभ्रं தப்ரம் என்றும் ஒரு பாடம் दहरं தஹரம் என்றும் ஒருபாடம்).

देवेषु தேவேஷு = தேவதைகளுக்குள்

---

து-பா:—ब्रह्मणः ப்ரஹ்மண: = பிரம்மத்தின்

रूपं ரூபம் = ரூபத்தை

त्वं अपि த்வம்அபி = நீரும்

नूनं நூநம் = நிச்சயமாய்

दहरंएव தஹரமேவ = அற்பமாகவே

वेत्थ வேத்த = அறிகிறீர். ஏனெனின், பிரம்மம் அநந்தமாயிருப்பதால் அதின் ஸ்வரூபம்மட்டும் தெரிந்தாலுங்கூட அதின் பூர்ண ஞான முண்டாகத் தகாதது என்று நீர் அறியவில்லை. அது அபரிச்சின்னமானது, நீர் அதை பரிச்சன்னமானதாக அறிந்திருக்கிறீர் என்பது கருத்து.

ச-பா:—(तत्) अपि (தத்) அபி = அதுவும்

(दहरं एव தஹரம் ஏவ = அற்பமே)

अथनु அத நு = பிறகு, ஆகையால்.

ते தே = உனக்கு, உன்னால்

(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம்)

मीमांस्यंएव மீமாம்ஸ்யம் ஏவ = விசாரிக்கத் தக்கதுதான்

(इति இதி= என்று)

मन्ये மந்யே = நினைக்கிறேன்.

(अथ அத = இப்போது)

(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம்

विदितं (इति) விதிதம் (இதி) = அறியப்பட்டதென்று

(अहं அஹம் = நான்)

(मन्ये மந்யே) = நினைக்கிறேன்.

---

வி-பா:—अस्य அஸ்ய = இந்த பிரம்மத்தின்

यत् யத் = யாதொரு ரூபத்தை

त्वं த்வம் = நீ

वेत्थ வேத்த = அறிகிறாயோ

(तदापिदभ्रमेव ததாபிதப்ரமேவ = அதுவும் அற்பமே) பிரம்மத்தின் ஸ்வரூபம் உன்னால் அறியப்படவில்லை.

अथनु அத நு = இனிமேல்தான்

ते தே = உனக்கு, உன்னால்

मीमांस्यं மீமாம்ஸ்யம் = விசாரிக்கத்தக்கது. இதுவரையில் உன்னால் நன்றாக விசாரிக்கப்படவில்லை என்பது கருத்து.

இந்த வாக்கியத்தைக் கேட்டு நன்றாக விசாரித்தேன் என்று சிஷ்யன் मन्योविदितं மந்யோவிதிதம் என்று சொல்லுகிறான்.

(अहं அஹம் = நான்)

विदितं (एव) விதிதம் ஏவ = பிரம்மம் அறியப்பட்டதாகவே

मन्ये மந்யே = நினைக்கிறேன்.

---

து-பா.—अथ அத = எக்காரணத்தால் பிரம்மத்தின் ரூபத்தைஸ்வல்பமாகவே நீர் அறிந்திருக்கிறீரோ அக்காரணத்தால் இனிமேல்

त्वं त्वयि த்வம் த்வயி = உம்மிடத்தில்

अस्य அஸ்ய = இந்த

ब्रह्मण: ப்ரஹ்மண: = பிரம்மத்தின்

यत् யத் = யாதொரு

रूपं ரூபம் = ரூபமுண்டோ அதுவும்

देवेषुच தேவேஷு ச = தேவதைகளிடத்திலும்

ச-பா:—यदि मन्यसे सुवेदेति:—யதி³ மந்யஸே ஸுவேதே³தி:—இவ்விதமாக "தள்ளத்தக்கதும் கிரஹிக்கத்தக்கதுமான வஸ்துவைவிட வேருனஆத்மாவாகிற பிரம்மம்" நீயே என்று போதிக்கப்பட்ட சிஷ்யன், தானே பிரம்மம் என்று தன்னை நன்ருக அறிந்ததாக எண்ணுவான் என்று ஆசாரியார் நினைத்து சிஷ்யனுடைய புத்தியை கலக்கும்பொருட்டு[85] சொல்லுகிருர் यदि யதி³ முதலிய மந்திரத்தால்.

இதன்பேரில் ஒருவன் ஆக்ஷேபிக்கக் கூடியதாவது :—"நான்தான் பிரம்மம் என்று நன்ருக அறிகிறேன்" என்று நிச்சயமாய் அறிதல் இஷ்டந்தானே. (இப்படி சிஷ்யன் அறிவது உத்தமந்தானே, இந்த புத்தியில் ஏன் கலக்க முண்டாக்கவேண்டும் எனின்) உத்தரம் சொல்லுகிருர் :—நிச்சயமான ஞானம் இஷ்டம்தான்; ஆயினும் "நான் நன்ருக பிரம்மத்தைத் தெரிந்துகொண்டேன்" என்னும் ஞானம் மாத்திரம் இஷ்டமில்லை. ஏனெனின், அறியக் கூடிய எந்த வஸ்து அறிவுக்கு விஷயமாகுமோ அது நன்ருகத் தெரிந்துகொள்ளக் கூடியதுதான் உதாரணம் :—எரிக்கக்கூடிய கட்டைமுதலிய வஸ்துக்கள் அக்கினியால் எரிக்கக்கூடியவை, எரிக்கிற அக்கினியின் ஸ்வரூபமாக இருக்கவில்லை. (அக்கினியின் ஸ்வரூபமே அக்கினியால் எரிக்கப்படமாட்டாது. அதுபோல், அறியக்கூடிய வஸ்து வேறு எதற்காவது விஷயமானல், அது நன்ருய் அறியக்கூடியதாகும், அறிகிறவனுடைய ஸ்வரூபமாக மாட்டாது. தெரிந்து கொள்ளுகிற சகலமான பேர்களுடையவும் ஆத்மாவாக

---

து-பா:—अस्य ब्रह्मणः यत् रूपं அஸ்ய ப்³ரஹ்மண: யத்ரூபம்=இந்தப் பிரம்மத்தின் யாதொரு ரூபமுண்டோ அதுவும்

विदितं விதி³தம் = ஸ்வல்பமாக அறியப்பட்டிருக்கிறதோ

(तत् தத் = அது)

ते त्वया தே த்வயா = உம்மால்

मीमांस्यम्। एव மீமாம்ஸ்யம் ஏவ = விசாரிக்கப்படவேண்டியது தான்.

नु நு = நிச்சயமாக இப்போதுகூட விசாரிக்கத்தக்கதுதான் என்று

मन्ये மந்யே = நான் நினைக்கிறேன்.

---

85. இதற்கு स्थूणाखनन ஸ்தூ²ணாக²நந நியாயம் என்கிருர்கள். பூமியில் குழிபறித்து நாட்டிய கம்பம் அசையாதிருக்கும்படி குத்திக் குத்திக் கெட்டிப்படுத்துவது உலகப்பிரசித்தம். இப்படியே சிஷ்யனுடைய புத்தியும் ஸ்திரப்படுத்தப் படுகின்றது.

ச-பா:—பிரம்மம்[86] இருக்கிற தென்பது சகலவேதாந்தங்களின் நிச்சயமான கருத்து. மேலும் இந்த உபநிஷத்தில் "श्रोत्रस्यश्रोत्रं ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் காதுக்குக்காது முதலிய கேள்வி உத்தரங்களால் அந்தப் பிரம்மமே பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. "மேலும், "यद्वाचाअनभ्युदितं" யத்³வாசா அநப்⁴யுதி³தம் அதாவது "வாக்கினால் சொல்லத்தகாதது" என்கிற வசனத்தால் இந்தச்சித்தாந்தம் விசேஷமாய் ஸ்திரப்படுத்தப் பட்டிருக்கிறது. மேலும், "अन्यदेव அந்யதே³வ

तद्विदितादथो अविदितादधि इति शुश्रुम धीराणां

தத்³விதி³தாத³தோ² அவிதி³தாத³தி⁴ இதி ஶுஶ்ரும தீ⁴ராணாம்

அதாவது பிரம்மம் அறியப்பட்டதைவிட வேறு அறியப்படாததைவிட வேறு இப்படி ஞானிகளினின்றும் கேட்டிருக்கிறோம்" என்றும் வசனத்தால் பிர்ம்ம ஞானிகளுடைய சம்பிரதாய (பரம்பரையாக வந்திருக்கிற) நிச்சயம் சொல்லப்பட்டது.

இப்படித்துவக்கி பிரம்ம ஸ்வரூபத்தைச் சொல்லி முடிக்குமிடத்திலும் [87] "अविज्ञात विजानतां विज्ञातं अविजानतां அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதம் அவிஜாநதாம் அதாவது தெரிந்தவர்களுக்குத் தெரியாதது, தெரிந்திராதவர்களுக்கு தெரிந்தது என்று சொல்லி முடிக்கிறார். ஆகவே "பிரம்மத்தை நான் நன்றாக அறிகிறேன்" என்கிற சிஷ்யனுடைய புத்தியை மாற்றவேண்டியது யுக்தந்தான். அக்கினி தஹிக்கிற அக்கினியால் தஹிக்கப்பட யோக்கியமாகாதது போல், அறிகிறவன் அறிகிறதன்றால் அறியப்பட யோக்கியனாகான். எவனால் பிரம்மம் வேறாக அறியப்படக்கூடுமோ அப்படி அறிகிறவன் பிரம்மத்தைவிட வேறாக இல்லை.

---

86. பிரம்மம் எக்காரணத்தால் அறிகிறவனுடைய ஸ்வரூபமா யிருக்கிறதோ அக்காரணத்தால் அது ஒன்றற்கும் விஷயமாகிறதில்லை. ஆனால் பிரம்மம் அறிகிறவனுடைய ஸ்வரூபம் என்னும் விஷயத்தில் பிரமாண மில்லாதபடியால், அது வேறாக இருப்பதாக நினைப்பதில் தோஷம் என்ன? இந்த சங்கையை நிவர்த்திக்கும் பொருட்டு பிரம்மம் ஞாதாவின் ஸ்வரூபமே என்பதை நிரூபணம் செய்கிறார்.

87. இது இந்த உபநிஷத்தின் 11 - வது மந்திரம். இதின் கருத்து என்னவெனின் எவன் வாஸ்தவமாய் பிரம்மத்தை அறிந்திருக்கிறானே அவன் பிரம்மம் ஞானத்துக்கு விஷயமன்று என்று அறிகிறான். எவன் வாஸ்தவமாய் பிரம்மத்தை அறியவில்லையோ அதாவது இந்திரியம், மனது, புத்தி, இவைகளை ஆத்மா என்று நினைக்கிறானே அவனுக்குமட்டும் பிரம்மம் அறியப்பட்டதாகத் தோன்றுகிறது.

ச-பா:—नान्यतोऽस्तिविज्ञाता 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 (இதைவிட வேருன அறிகிறவனில்லை " என்னும் பிரஹதாரணியாகத்தின் III 8 - 11-வது சுருதி வசனத்தாலும் பிரம்மத்தைவிட வேருன அறிகிறவன் நிஷேதிக்கப்பட்டிருக்கிருன். ஆகையால் " நான் பிரம்மத்தை நன்ருக அறிகிறேன்" என்று அறிதல் பொய்யே. ஆகையால் " பிரமத்தை நன்ருக அறிந்தவனுக நினைத்தாயாகில்" என்று ஆசாரியர் சொன்னது யுக்தமே.

यदि யதி (ஒருகால்) இந்த சம்சயமான அர்த்தத்தைச் சொல்லும் பதத்தைப்போட்டதின் பிரயோசனத்தைச் சொல்லுகிருர்:— ஒருகால், கஷ்டத்தின்பேரில் அறியக்கூடிய பிரம்மத்தைக்கூட சிரவணம் செய்தபடி தோஷமற்ற நல்ல புத்தியுள்ள புருஷன் அறிகிருன், ஒருவன் அப்படி அறிகிறதில்லை (இப்படி சிஷ்யனுக்கு ஒருவேளை தெரிந்திருந்தாலும் இருக்கலாம், தெரியாமலிருந்தாலும் இருக்கலாம் என்று) குருவானவர் சங்கித்து यदि யதி என்று சொல்லி யிருக்கலாம். (ஒருவனுக்கு தெரிந்தும் ஒருவனுக்கு தெரியாமலிருத்தல் நம்முடைய) பார்வையில் வந்திருக்கிறது. எப்படியெனின்.

एषोऽक्षिणि पुरुषो दृश्यत एष आत्मेति होवाच एतदमृत मभयमे तद्ब्रह्म

𑌏𑌷𑍋𑌽𑌕𑍍𑌷𑌿𑌣𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤 𑌏𑌷 𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑌿
𑌹𑍋𑌵𑌾𑌚 𑌏𑌤𑌦𑌮𑍃𑌤𑌮𑌭𑌯𑌮𑍇𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮

அதாவது கண்ணில் காணப்படும் புருஷன் ஆத்மா, மரணமற்றவன். பயமற்றவன், அவனே பிரம்மம் என்று (சாந்தோக்கியம் 8-7 - 4) பிரஜாபதி (பிர்ம்மா) சொல்லியும், கஸ்யப பிரஜாபதி வம்சத்தில் உண்டான பிரஹலாதனிடம் பிறந்தவனும் அசுர ராஜாவாயும் இருக்கிற விரோசனன் [88] பண்டிதனு யிருந்தும் ஸ்வபாவ

---

88. இந்த கதை சாந்தோக்கியத்தில் வருகிறது :—" ஆத்மாவை விசாரிக்கவேண்டும். ஆத்மஞானம் சம்பாதிக்கவேண்டும். ஆத்ம ஞானத்தைச் சம்பாதித்தால் சகலமும் அடையப்படும்" இந்த பிரஜாபதியின் வசனம் பரம்பரையாக தேவர் அசுரர்களுடைய காதை எட்டிற்று. அப்போது தேவதைகள் சபைகூடி ஆத்மாவை விசாரிக்கவேண்டும் என்று நிச்சயித்தார்கள். அசுரர்களும் அப்படியே செய்தார்கள். முதலில் தேவராஜாவான இந்திரனும், அசுரராஜாவான விரோசனனும் சகல ஐசுவரிய போகங்களைப் பரித்தியாகம் செய்து, தாங்கள்மட்டும் கையில் சமித்துக்களை எடுத்துக் கொண்டு பிரஜாபதியினிடம் சென்ருர்கள். முப்பத்திரண்டு வருஷம் இருவரும் பிரம்ம சாரிகளாக இருந்து பிரஜாபதியை சேவித்தார்கள். பிறகு பிர

ஜாபதி அவர்களை வந்தகாரியம் என்னவென்று கேட்க, தங்கள் உத்தேசத்தை அவர்கள் தெரியப்படுத்திக் கொண்டார்கள். பிறகு பிரஜாபதி இவர்கள் தவசிகளாயும், தோஷமற்றவர்களாயும் ஆனதால் உபதேசத்துக்கு யோக்கியர்களாயு மிருக்கிறார்கள் என்று அறிந்து அவர்களுக்கு பாஷ்யத்திற் சொல்லிய यएषोऽक्षिणिपुरुषोदृश्यते [Grantha transliteration, illegible] (கண்ணில் காணப்படுகிறவரே ஆத்மா) என்று உபதேசம் செய்தார். மேலும், அந்த உபதேசத்தில் ஏதேனும் சங்கை யிருந்தால் அதை நிவிர்த்திக்கும்பொருட்டு, இவர்களை சாதாரணமாயும், அலங்காரத்துடனும் ஜலத்தில்பார்க்கும்படி பிரஜாபதிசொன்னார். விரோசனன் உபதேசத்தாலே திருப்தி அடைந்து நேத்திரத்திற் காணப்படுகிறவனே ஆத்மா என்று நினைத்து அசுரர்களிடம் சென்றான். ஆனால் இந்திரன் உபதேசத்தால் சமாதானம் அடையவில்லை. சரீரத்தை அனுசரித்து ஆத்மா இருக்கும் பக்ஷத்தில் சரீரம் நாசமாவதுடன் ஆத்மாவும் நாசமாகவேணும். அப்போது ஆத்மாவில் என்ன விசேஷ மிருக்கிறது. அதை விசாரிப்பதிலும், அறிவதிலும் இவ்வளவு சிரமம் எடுத்துக்கொள்ளுவானேன் என்று நினைத்து இந்திரன் திரும்பிப்போகாமல் நின்றான். பிறகு இந்திரன் பிரஜாபதியினிடம் வந்து முப்பத்திரண்டு வருஷம் சேவை செய்தான். பிறகு பிரஜாபதி அவனுக்கு यएषस्वप्ने महीयमानश्चराति [Grantha transliteration, illegible] (ஸ்வப்நத்தில் போகங்களை அனுபவிக்கிறவனே ஆத்மா) என்று உபதேசம் செய்தார். இதனாலும் இந்திரன் சமாதானத்தை அடையவில்லை. கண்ணிற்றோன்றும் சாயா புருஷன்போல் ஸ்வப்னத்தில் ஆத்மா சரீரதோஷங்களுடன்கூடியிராவிடினும், சில சமயங்களில் சுகதுக்கங்களை அடைகிறான் "ஆத்மா இப்படி இருந்தால் பிரயோஜனமென்ன? இப்படி நினைத்து இந்திரன் மறுபடியும் திரும்பிவந்து பிரஜாபதியை முப்பத்திரண்டு வருஷம் சேவித்தான். பிறகு பிரஜாபதி அவனுக்கு "तद्यत्रैतत् सुप्तः संप्रसन्नः स्वप्नंनविजानात्येष आत्मा" [Grantha transliteration, illegible] (நேத்திரத்திலும் ஸ்வப்நத்திலும் எவன் தூங்குகிறானோ அவனே ஆத்மா,) என்று உபதேசம் செய்தார். இந்த உபதேசத்தாலும் இந்திரன்சமாதானத்தை அடையவில்லை. தூக்கத்தில் ஆத்மா தன்னையும் அறிகிறதில்லை வேறு ஒன்றையும் அறிகிறதில்லை; ஆகவே ஆத்மா நாசமாகிறான். இப்படிப்பட்டவன் ஆத்மா ஆகமாட்டான் என்று இந்திரன் நினைத்து மறுபடியும் திரும்பிவந்து ஐந்து வருஷம் குருவின் சேவை செய்தான். அப்போது பிரஜாபதி இந்திரனுக்கு சரீரத்தின் நசுவர தர்மத்தையும், சரீர சம்பந்தத்தால் சுகதுக்கப் பிராப்தியையும் சொல்லி, கடைசியில் एषसंप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरूपं संपद्यस्वेन रूपेणाभिनिष्पद्यते [Grantha transliteration, illegible] (இந்த ஜீவன் இந்த சரீரத்தினின்றும் வெளிப்பட்டு அதாவது ஆத்மா தேக முதலியவைகளைவிட வேறு என்று தன் ஸ்வரூபத்தை அறிந்து, தேகமுதலியவைகளேதான் என்னும் விபரீத பாவத்தை விட்டு பரமஜ்யோதியை அடைந்து தன்னுடைய ஸ்வரூபத்தை அடைகிறான்) என்று உபதேசம் செய்தார். இந்த உபதேசத்தை ஒருதடவை கேட்ட மாத்திரத்தில் இந்திரனுக்குச் சம்சயம் நீங்கி அவன் சமாதானமடைந்தான்.

ச-பா:—தோஷபலத்தால் அறியவில்லை. ஆனால் சரீரமே ஆத்மா என்கிற விபரீதபாவம் பொருந்தாவிட்டாலும் அந்த விபரீதபாவத்தையேதரித்தான் 89. அப்படியேதேவராஜாவான இந்திரனும் ஒரு தட்வை இரண்டு தடவை, மூன்று தடவை சொல்லியும் அறியவில்லை. ஆனால் தன்னுடைய ஸ்வபாவதோஷம் 90 நாசமடைந்ததின் பேரில், நான்காவது தடவை (பிரம்மத்தைபற்றி) சொன்ன மாத்திரத்தில்முதல் தடவை சொன்ன பிரம்மத்தை அறிந்தான்.

(2) உலகத்திலும் ஒரே குருவினிடத்தில் சிரவணம் செய்கிற அநேக சிஷ்யர்களுக்குள், ஒருவன் சிரவணம் செய்ததை உள்ளபடி கிரகிக்கிறான், ஒருவன் உள்ளபடி கிரகிக்கிறதில்லை. ஒருவன் விபரீதமாய் கிரகிக்கிறான். ஒருவன் சுத்தமாய் கிரகிக்கிறதில்லை. இந்திரியங்களால் அறியக்கூடிய விஷயமே இப்படி இருந்தால், இந்திரியத்துக்கு விஷயமாகாத ஆத்மதத்துவ விஷயத்தை சிலர் அறிகிறார்கள்; சிலர் அறிகிறதில்லை என்று சொல்லுவானேன். இந்த ஆத்மதத்துவமோ, அறிவதற்கு எவ்வளவு கஷ்டமெனின் ஆத்மா இருக்கிறதா, ஆத்மா இல்லையா என்று சகல தார்க்கிகர்களும் (புத்திவாதிகள்) விவாதப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஆகையால் (பெரிய பெரிய பண்டிதர்கள்கூட வாதம் செய்கிறார்கள். அவர்களுக்கும் வாஸ்தவம் இன்னது என்று நிச்சயப்படவில்லை ஆகையால்) **अविदितब्रह्म** அவிதிதம்ப்ரஹ்ம அதாவது பிரம்மம் அறியப்படவில்லை, ஞானத்துக்கு விஷயமல்ல என்று நிச்சயமாய் சொல்லியிருந்தாலும் ஒரே விதமாய் அறியப்படாமையை குருவானவர் மனதில் வைத்துக்கொண்டு **यदिमन्यसेसुवेदेति** யதிமந்யஸே ஸுவேதேதி (நான் நன்றாக பிரம்மத்தை அறிகிறேன் என்று நினைத்தாயானால்) என்கிற சந்தேக வசனத்தைச் சொன்னது யுக்தமே.

**दहर्...रूपं** தஹரம்...ரூபம் நிச்சயமாய் இந்த பிரமத்தின் அற்ப ரூபத்தைத்தான் நீ அறிகிறாய்

**ஆக்ஷேபம்** :—பிரம்மத்தின் ரூபம் சிறிது என்றும் பெரிது என்றும் அநேகவிதமாய் இருக்கிறதாய் அதை உத்தேசித்து பிரமத்தின் அற்பரூபத்தை அறிகிறாய் என்று ஆசாரியார் சொல்லுகிறாரா?

---

89. கண்ணில் காணப்படுகிறான் என்று பிரசித்தமாக உபதேசிக்கப் பட்டபடியால் கண்ணில் சரீரத்தின் சாயை காணப்படுகிறது என்னும் காரணத்தால் சரீரமே ஆத்மா என்று விரோசனன் நினைத்தான்.

90. பிரம்ம சரிய விரதம் ஆசரித்ததினால் இந்திரனுடைய அதர்மாதி தோஷங்கள் நிவிர்த்தியாகி, பிறகு அவனுக்கு உபதேசம் செய்ததின்பேரில் ஆத்ம ஞானம் உண்டாகிறது.

**ச-பா:**—உத்தரம்:—சரிதான். நாமரூப உபாதி பேதங்களால் ஏற்பட்டபிரம்மத்தின் ரூபங்கள் அநேகங்கள்தான்; வாஸ்தவத்தில் அநேக ரூபங்களில்லை. வாஸ்தவத்திலோபிரம்மம், **अशब्दमस्पर्शमरूपं अव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्चयत्** அஶப்தமஸ்பர்ஶமரூபம் அவ்யயம் ததாऽரஸம் நித்யமகந்தவச்சயத் அதாவது பிரம்மத்தினிடத்தில்சப்தம்,ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் இவைகள் இல்லாதபடியால் அது விகாரமற்றது, நித்தியமானது என்று கடவல்லி I - 3 - 15-வது சுருதி சப்தாதிகளையும் ரூபங்களையும் நிஷேதிக்கிருக்கிறது.

பிரம்மத்துக்கு ஸ்வத: ரூபமில்லை என்பதை ஆக்ஷேபிக்கிறார்:—எந்த தர்மத்தால் எது நிரூபிக்கப்படுகிறதோ அதுவே அதின் ஸ்வரூபமாகையால், பிரம்மத்துக்கும் எந்த விசேஷணத்தால் நிரூபணமோ அதுவே அதின் ரூபமாகவேண்டும்.

(இதற்கு உத்தரம்:—) (எந்த விசேஷணத்தால் பிரம்மம் நிரூபிக்கப் படுகிறதெனில் அது) சைதன்னியம். இந்த சைதன்னியம் பிருதிவிமுதலிய ஐந்து பூதங்களில் ஒன்றினுடைய அல்லது தேஹாகாரத்தை அடைந்திருக்கும் சகல பூதங்களினுடைய தர்மமல்ல [91]. அப்படியே அது சுரோத்திரம் [92] முதலிய இந்திரியங்களுக்கும் அந்தக்கரணத்துக்கும் தர்மமல்ல. இந்த சைதன்னிய ரூப விசேஷணத்தால பிரம்மம்நிரூபிக்கப் படுவதால், இந்தசைதன்னியமேபிரம்மத்தின்ரூபம் [93]. அப்படியேசுருதிகளில்சொல்லப்பட்டிருக்கிறது:— **विज्ञानं आनन्दंब्रह्म** விஜ்ஞானம் ஆனந்தம் ப்ரஹ்ம (பிர III - 9 - 28) **विज्ञानघनएव** விஜ்ஞானகன ஏவ **सत्यंज्ञानं अनन्तं** ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் (II - 1 - 1) **प्रज्ञानंब्रह्म** ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம இப்படி சைதன்னியம் பிரம்மத்தின் ரூபமென்று சுருதிசொல்லி

---

91. பஞ்ச பூதங்களுக்கும் இவைகளின் காரியங்களான தேஹாகாரமடைந்த சகல பதார்த்தங்களுக்கும் சைதன்னியம் தர்மமல்ல, ஏனெனின் (1) இவைகளின் தர்மங்களாகிய ரூபாதிகள் இந்திரியங்களுக்கு விஷயமாவதுபோல காணப்படவில்லை, அதாவது விஷயமாகிறதில்லை. (2) சைதன்னியத்தை ரூபம் முதலிய தர்மம்போல் இவைகளின் தர்மமாக நினைக்கும்பட்சத்தில் அவைகளுக்கு சாதகமல்ல என்னும் பிரசங்கம் சம்பவிக்கும். ஆகையால் அந்த சேதனத்தன்மை இவைகளின் தர்மமல்ல.

92. சுரோத்திரம் முதலியவைகளும் பூதகாரியங்களாகவே இருப்பதால் சைதன்னியம் அவற்றின் தர்மமல்ல.

93. ஆகவே ஒன்றற்கும் தர்மமாகாத ஸ்வதந்திர சைதன்னியம் மிஞ்சுகிற பிரம்மத்தின் ரூபம்.

ச-பா:—யிருக்க, பிரம்மத்துக்கு ரூபமில்லை (ब्रह्मअरूपं [illegible] ஹ்மாரூபம் என்று ஏன் சொல்லவேண்டுமென்று சங்கை உண்டாக அதற்கு உத்தரம்:—ஸ்வபாவத்தில் பிரம்மத்துக்கு ஒரு ரூபமுமில்லை என்பது சத்தியமானாலும், அந்தக்கரணம், தேகம், இந்திரியம், இவைகளாகிய உபாதிகளால் பிரம்மத்தின் ரூபம் விஞ்ஞான முதலிய சப்தங்களால் சொல்லப்படுகிறது. ஏனெனின் சரீரமுதலிய உபாதிகள் சங்கோசம், விகாசம் (விர்த்தி) சேதம், நாசம் இவைகளை

---

94. ஒன்று மற்றொன்றுடன் சம்பந்தப்பட்டால் அதற்கு இது உபாதியாகச் சொல்லப்படுகிறது. அசங்கமான சைதன்னியத்திற்கு தேகாதிகள் எப்படி உபாதியாகும். ஜலம் அசையும்போது அதில் பிரதி பிம்பித்த சூரியன் அசைகிறதுபோ லிருக்கிறது. ஜலம் பேதிக்கப்படும்போது சூரியனும் பேதப்படுகிறதுபோ லிருக்கிறது. இதனால் மித்தையான ஜலத்தின் தர்மங்களும் சூரியனுக்கு ஏற்படுகின்றன. இதனால் சூரியனுக்கு ஜலம் உபாதியாகச் சொல்லப்படுகிறதே தவிர வாஸ்தவ சம்பந்தத்தாலல்ல. ஏனெனின் வெகு தூரத்திலிருக்கிற சூரியனுக்கும் ஜலத்துக்கும் சம்பந்தம் உண்டாக மாட்டாது. இதுபோல் தேகாதிகள் விர்த்தி முதலியவைகளை அடையும் விஷயத்திலும், சைதன்னியம் மித்தையான தேக தர்மங்களில் சம்பந்தப்படுவதுபோல் காணப்படுவதால் சைதன்னியத்துக்கு தேகமுதலியவைகள் உபாதிகளாகச் சொல்லப்படுகின்றன.

அத்தியாத்ம அதிதைவமான பிரம்மத்தின்ரூபம் அற்பம் என்று இதற்கு முன் சொல்லப்பட்டது. இந்த பாகத்தை வேறு விதமாயும் அர்த்தம் செய்யலாம். எப்படியெனின்.

(1) சூட்சும புத்தியுள்ள அக்கினிமுதலிய தேவதைகளுக்குள் நன்றாய் அறிந்ததாக எவன் நினைக்கிறானோ, அவனும் இந்தபிரம்மத்தின் ரூபத்தை அற்பமாகவே அறிகிறான். இது நிச்சயம். அற்பபுத்தியுள்ள மனிதர்களுக்குள் சொல்ல வேண்டியதென்ன. ஆகையால் விசாரிக்கத்தக்கதென்று சொல்லப்பட்ட சிஷ்யன் मन्येत्रिदितं மன்யே விதிதம் என்று சொல்லுகிறான். அல்லது (2) அத்தியாத்ம அதிதைவமான பிரம்மத்தின் யாதொரு ரூபமுண்டோ அது உபாதி சகிதமானது அது உன்னால் அறியப்பட்டது. அது அற்பமே. ஆனால் பூமா என்றுபெயருள்ள சிரேஷ்டமான ரூபம் அற்பமல்ல. அது உன்னால் விசாரிக்கத்தக்கது. இப்படி சொல்லப்பட்ட சிஷ்யன் உபாதியை விட்டு விட்டு அனுபவத்தால் நிச்சயம் செய்து मन्योत्रादेतं மன்யே விதிதம் என்று சொல்லுவதாக அர்த்தம் செய்யலாம்,

அறியப்பட்டரூபம் ஏன் அற்பமெனின் अन्यदेवताद्विदितात् அன்யதேவ தத்விதிதாத் (கேன I - 3) என்று முன் சொல்லப்பட்டிருக்கிறது.

ச-பா:—அடைவதை அனுசரித்து (இவைகளுடன் சம்பந்தப்பட்ட) பிரம்மத்துக்கும் இவைகள் ஔபசாரிகமாக சொல்லப்படுகின்றன வாஸ்தவத்தில் பிரமமத்தின் ஸ்வரூபத்துக்கு இவைகளில்லை. ஸ்வரூபத்தில் 95 பிரம்மம்

अविज्ञातं विजानतां विज्ञातं अविजानतां

அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதம் அவிஜாநதாம்

(அறிந்தவர்களுக்குத் தெரியாதது, அறியாதவர்களுக்கு தெரிந்தது) என்று மேல் (இந்த கண்டத்தின் 3 - வது மந்திரத்தில்) சொல்லப்படுகிறது.

**त्वं यदस्य देवेषु:**—த்வம் யதஸ்ய தேவேஷு :—சிஷ்யனே, கேவலம் தேகம் இந்திரியம், முதலிய அத்தியாத்ம உபாதிகளால் பிரிக்கப்பட்டிருக்கிற எந்த ரூபங்களை அதாவது பிரம்மத்தின் ரூபங்களை நீ அறிகிருயோ அவைகள்மட்டும் அற்பங்களல்ல. ஆனால் அதிதைவத உபாதிகளால் பிரிக்கப்பட்ட இந்திரன் முதலிய தேவதைகளிடத்திலும் நீ அறியும் இந்த பிரம்மத்தின் ரூபம் அற்பமே என்று நான் நினைக்கிறேன். அத்தியாத்ம ரூபமாயும் அதிதைவருபமாயுமிருக்கிற பிரம்மம் தேவதைகளிடத்தில் உபாதிபேதத்தாலும் அற்பத்தன்மையாலும் விலகமாட்டாது. (இந்த அத்தியாத்ம அதிபூத பிரமரூபமே உள்ளபடி அறிய) முடியாதிருக்க சகல உபாதிபேதங்களற்றதாயும், சாந்தமாயும், அநந்தமாயும், ஏகமாயும், அத்வைதமாயும், பூமா என்று பெயருள்ளதாயும், நித்தியமாயுமிருக்கிற பிரம்மம் நன்ருக அறியப்படமாட்டாது என்பது கருத்து. ஸ்வயம் பிரகாச ரூபமாயிருப்பதால் புத்திவிருத்தியாகிற ஞானத்துக்கு அது விஷயமாகமாட்டாது என்று அபிப்பிராயம்.

**अथनु... मन्ये :**—அத நு...மந்யே ஆகையால் இனியும் பிரம்மம் உன்னால் விசாரிக்கத்தக்கது தான் என்று நான் நினைக்கிறேன்.

**विदितम् :**—விதிதம் இவ்விதமாக ஆசாரியரால் சொல்லப்பட்ட சிஷ்யன் ஏகாந்தமான இடத்தில் உட்கார்ந்து மனதை நிலைநிறுத்தி ஆசாரியரால் சொல்லப்பட்ட சுருதிவாக்கியத்தை அர்த்தத்துடன்

---

95. சைதன்னியத்தால் பிரம்மம் நிரூபிக்கப் படாவிட்டால், அதின் அனுபவம் தான் எப்படி உண்டாகும் ? இப்படி சங்கித்து அதற்குச் சமாதானம் சொல்லுகிருர் :—தான் ஒன்றுக்கும் விஷயமாகாதபடியால், விஷய சம்பந்த மன்றில் உண்டாகும் சேதன ஸ்புரணமே பிரம்மத்தின் அனுபவம் என்பது கருத்து.

10 नाहंमन्ये सुवेदेति नोनवेदेतिवेदच ।
यो नस्तद्वेद तद्वेद नोनवेदेतिवेदच ॥ 2 ॥

10 𑌨𑌾𑌹𑌂𑌮𑌨𑍍𑌯𑍇 𑌸𑍁𑌵𑍇𑌦𑍇𑌤𑌿 𑌨𑍋𑌨𑌵𑍇𑌦𑍇𑌤𑌿𑌵𑍇𑌦𑌚 ।
𑌯𑍋 𑌨𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍇𑌦 𑌤𑌦𑍍𑌵𑍇𑌦 𑌨𑍋𑌨𑌵𑍇𑌦𑍇𑌤𑌿𑌵𑍇𑌦𑌚 ॥ ௨ ॥

अहं 𑌅𑌹𑌂 = நான்
सुवेद 𑌸𑍁𑌵𑍇𑌦 = நன்றாக அறிந்திருக்கிறேன்
इति 𑌇𑌤𑌿 = என்று
नमन्ये 𑌨𑌮𑌨𑍍𑌯𑍇 = நினைக்கவில்லை.

---

ச-பா:—விசாரித்து தர்க்கத்தினலை [96] (யுக்தியால்) நிச்சயம் செய்து தன்னுடைய அனுபவத்துக்குக் கொண்டுவந்து ஆசாரியரிடம் வந்து சொல்லுகிறதாவது:—இப்போது பிரம்மம் அறியப்பட்டதாகநான் நினைக்கிறேன். [97] ॥ 2 ॥

---

வி-பா:-10. எப்படி எனின் नाहंमन्ये 𑌨𑌾𑌹𑌂𑌮𑌨𑍍𑌯𑍇 = என்று சொல்லுகிறன்.

अहं 𑌅𑌹𑌂 = நான்
सुवेद 𑌸𑍁𑌵𑍇𑌦 = நன்றாக அறிகிறேன்.
इति (अपि) 𑌇𑌤𑌿 𑌅𑌪𑌿 = என்றுகூட
नमन्ये 𑌨𑌮𑌨𑍍𑌯𑍇 = நினைக்கவில்லை.

---

## 10 - வது மந்திரம்.

து-பா:--மற்றவர்களுக்கு பிரம்மத்தின் பூர்ணமான ஞானமில்லாவிடினும், உமக்குச் செவ்வையான பிரம்மஞான மிருக்கிறதல்லவா என்று சிவன் கேட்டதின்பேரில் பிரம்மா नाहं मन्ये 𑌨𑌾𑌹𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 என்று சொல்லுகிருர். இந்தப் பிரம்மதேவன் பிரம்மத்தைச் செவ்வையாக அறிகிறன் என்று பிறர் என்னைக் குறித்துச் சொல்லுகிருர்கள். ஆனல்

து-பா:—अहं (तु) 𑌅𑌹𑌂 𑌤𑍁 = நானே
(ब्रह्म 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 = பிரம்மம்
मया 𑌮𑌯𑌾 = என்னல்)
सुवेद 𑌸𑍁𑌵𑍇𑌦 = செவ்வையாய் அறியப்பட்டிருக்கிறது.
इति 𑌇𑌤𑌿 = என்று
नमन्ये 𑌨𑌮𑌨𑍍𑌯𑍇 = நினைக்கவில்லை.

---

96. பிரம்மம் ஞானத்துக்கு விஷயமானல் கடம் முதலியவைகள் போல் அதுவும் அநாத்மாவாகும். இப்படிப்பட்ட யுக்தியால் பிரம்மம் ஆத்மாவால் அறியத்தக்கதன்று என்று நிச்சயம் செய்து.

97. அஞ்ஞானம், சம்சயம், முதலியவைகளின்மையால் தன்னுடைய அனுபவத்துக்குக் கொண்டுவந்து.

ச-பா:—नोवेद नோவேத = அறியவில்லை

इति இதி = என்று

नवेद நவேத = அறியவில்லை

च=नवेदच வ=நவேதவ = அறியவுமில்லை.

नोनवेदेतिवेदच நோநவேதேதிவேதவ=அறியவில்லை என்று அறியவில்லை, அறியவுமில்லை என்கிற

तत् தத் = இந்த வசனத்தை

नः நஃ = எங்களுக்குள்

यः யஃ = எவன்

वेद வேத = அறிந்திருக்கிறானோ

सः ஸஃ = அவன்

तत् தத்= அந்தப்பிரம்மத்தை

वेद வேத = அறிந்திருக்கிறான்.

---

வி-பா:-नवेद நவேத= அறியவில்லை

इति (अपि) இதி (அபி) = என்றுகூட

नो நோ = நினைக்கவில்லை.

(अपितु அபிது = ஆனால்

वेदच வேதவ = அறிந்தே இருக்கிறேன். ஆனதால் முழுமையும் அறியப்படவில்லை, கொஞ்சம் அறியப்பட்டிருக்கிறது என்று கருத்து.

नः நஃ = பிரம்மசாரிகளான எங்களுக்குள்

यः யஃ = எவன்

नोनवेदेतिवेदच நோநவேதேதிவேதவ = என்னும் வாக்கியங்களால் குறிப்பிடப்பட்ட

तत् தத் = மேற்சொன்னதை

वेद வேத = அறிகிறானோ

(सः ஸஃ = அவன்)

तत् தத் = அந்த பிரம்மத்தை

वेद வேத = அறிகிறான். ॥ 2 ॥

---

து-பா:—यदिमन्यसे யதிமந்யஸே முதல் नाहंमन्येसुवेदेति நாஹம்மந்யே ஸுவேதேதி என்பது ஈறாகிய வாக்கியங்களால் சிவனுக்கும் பிரம்மாவுக்கும் விஷ்ணுவை பூர்த்தியாய் அறியவில்லை யென்பது சொல்லப்பட்டது; மற்றவர்களுக்குச் சொல்லப்படவில்லை எனின் கைமுதிக நியாயத்தால் மற்றவர்களுக்கும் சொன்னதுபோலத்தான். ஓ சங்கரரே, நீரும் பிரம்மத்தை கொஞ்சங்கூட அறியவில்லையா என்று நீர்

ச-பா:—ना...सुवेदेति நா...ஸுவெதெதி:—பிரம்மத்தை நீஎப்படி அறிந்திருக்கிறாய் என்று குரு கேட்க சிஷ்யன் சொல்லுகிறான். சுவாமியே கேளும், நான் பிரம்மத்தை நன்றாய் அறிவேன் என்று நான் நினைக்கவில்லை. அப்படியானால் நீ பிரம்மத்தை அறியவில்லை என்று குருசொல்ல சிஷ்யன் नोनवेद நொநவெத என்று சொல்லுகிறான். நான் பிரம்மத்தை அறியவில்லை என்று அறியவில்லை, அறியவுமில்லை. நான் நன்றாய் அறிந்ததாக நினைக்கவில்லை, அறியவில்லை என்று அறியவில்லை, அறியவுமில்லை, இப்படிச் சொல்லுவது பரஸ்பரம் விருத்தமாயிருக்கிறது. நன்றாக அறிவதாக நீ நினைக்காவிட்டால் அறிவேன், அறியவில்லை என்று நீ எப்படி நினைக்கக்கூடும். நீ அறிவதாக நினைத்தால் நன்றாய் அறிவதாக ஏன் நினைக்கக்கூடாது. ஒரே வஸ்து எவனால் அறியத்தக்கதோ அவனாலேயே அதே வஸ்து, சம்சயவிபரியய (பிரமை)ங்களில்லாத வரையில், செவ்வையாய் அறியப்படவில்லை என்று சொல்லப் படக்கூடாது. பிரம்மம் சம்சயத்துடன் அறியப்படுகிறதென்றாவது விபரியயத்துடன் அறியப்படுகிறதென்றாவது சொல்லக்கூடாது.

---

து-பா:—என்னை கேட்பீரேயாயின் नोन நொந என்று பிரம்மா சொல்லுகிறார்.

नवेद நவெத = நான் பிரம்மத்தைக் கொஞ்சங்கூட அறியவில்லை.

इति नो இதிநொ = என்பது இல்லை. ஆனால் அற்பமாக

वेदच வெதச = அறிகிறேன்.

ஓ பிரம்மாவே நீர் பிரம்மத்தை நன்றாய் அறியாத பக்ஷத்தில் நீர் அஞ்ஞானியாகவேண்டும், எனின், நான் அஞ்ஞானி அல்ல, ஞானிதான், ஏனெனின் பிரம்மத்தை நன்றாக அறிந்ததாக நினைக்கிறவனே அஞ்ஞானி. நன்றாய் அறியப்படவில்லை என்று நினைக்கிறவன் ஞானியே. இந்த கருத்துடன் பிரம்மம் முழுமையும் அறியப்படவில்லை, கொஞ்சம் அறியப்படுகிறது என்று இனி சொல்லுகிறார்.

பிரம்மம் சம்பூர்ணமாய் அறியப்படமாட்டாது என்று சொன்னதை योन யொந என்பதினால் உபசம்ஹாரஞ் செய்கிறார்.

नः நஃ = எங்களுக்குள்

यः யஃ = எவன்

तत् தத் = அந்தப் பிரம்மத்தை

ச-பா:—சம்சயவிபரியயங்கள் எங்கும் அநர்த்தத்தையேகொடுக்கும் என்பது பிரசித்தம். இவ்விதமாக குருவால் கலக்கம் அடைவிக்கப் பட்டபோதிலும் சிஷ்யன் மனங்கலங்காமல் अन्यदेवतद्विदितादथो अविदितादधि (केन I-3) அந்யதேவ தத்விதிதாதயோ அவிதிதாதயி (கேந I-3 என்று குருவால் உபதேசிக்கப்பட்ட சுருதி சம்பிரதாய பலத்தாலும், யுக்தி அனுபவங்களின் பலத்தாலும் பிரம்ம வித்தையால் தன்னுடைய திடமான நிச்சயத்தை காண்பிவிக்கிறவனாய் योनस्तत्...वेदच யோநஸ்தத்...வேதச என்று கர்ஜித்தான். அதாவது சுவாமியே, பிரம்மசாரியாசிரமத்திலிருக்கிற எங்களுக்குள் மேற்சொன்ன नोनवेदेतिवेदच நோநவேதேதிவேதச என்னும் வசனத்தை உள்ளபடி எவன் அறிந்திருக்கிறானோ அவன் பிரம்மத்தை அறிந்தவன். अन्यदेवताद्विदितादथो अविदितादधि அந்யதேவ தத்விதிதாதயோ அவிதிதாதயி (அது அறியப்பட்டதைவிட வேறு அறியப்படாததைவிட வேறு) என்கிற, வாக்கியத்தால் சொல்லப் பட்டதும் அனுமானத்தாலும் அனுபவத்தாலும் கிரகிக்கப்பட்ட வஸ்துவை नोनवेदेतिवेदच நோநவேதேதிவேதச என்னும் வேறு வசனத்தால் ஆசாரியாருடைய புத்திக்குச் சமானமான புத்தியுள்ளவன் என்றும், மந்தபுத்தி யுள்ளவர்கள் அறியமாட்டார்கள் என்றும் காட்டும்பொருட்டுச் சொன்னான் 98. ஆகையால் योनः யோநঃ என்று சிஷ்யன் கர்ஜித்ததுயுக்தமே.॥ 2 ॥

---

து-பா:—(अहं) वेद அஹம்வேத = நான் அறிந்திருக்கிறேன்.

(इति वदाति இதிவததி = என்று சொல்லுகிறானோ)

(स: ஸঃ = அவன்)

तत् தத் = அந்தப் பிரம்மத்தை

नोवेद நோவேத = அறிந்திருக்கவில்லை. ஏனெனின் பிரம்மம் பரிச்சின்னம் என்னும்ஞானத்தை அவன் உடையவனாயிருக்கிறான்

(अहं அஹம் = நான்)

नवेद நவேத = அறிந்திருக்கவில்லை.

(इतिय: वदति இதியঃ வததி = என்று எவன் சொல்லுகிறானோ)

(असौ அஸௌ = அவன்)

वेदच வேதச = பிரம்மத்தை அறிகிறான். ஏனெனின் அபரிச்சின்னமான பிரம்மத்தை அபரிச்சின்னமாகவே அவன் அறிகிறான்.

---

98. ஆசாரியருடைய வசனத்திற்கு வேறான வசனத்தைச் சிஷ்யன் சொன்னதாக கிரகிக்கக்கூடாது. ஆசாரிய புத்திக்குச் சரியான புத்தி சிஷ்யனுக்கு இருக்கிறதென்றும் ஆசாரியர் சொன்னதைவிட வேறு சிஷ்யன் சொல்லவில்லை என்றும் ஏற்பட்டிருக்கும்போது என்பது கருத்து.

11 यस्यामतं तस्यमतंमतं यस्य नवेदसः ।
अविज्ञातं विजानतां विज्ञातमविजानताम् ॥ ३ ॥

11 யஸ்யாமதம் தஸ்யமதம் மதம் யஸ்ய நவேதஸ꞉ ।
அவிஜ்ஞாதம்விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் ॥ ௩ ॥

ச-பா:—यस्य யஸ்ய = எந்தப் பிரம்மஞானிக்கு

---

## 11 - வது மந்திரம்.

வி-பா:—यस्य अमतं யஸ்ய அமதம் = எவனுக்கு பிரம்மம் பரிச்சின்னமாக அதாவது அளவில் அடங்கினதாக நினைப்பு இல்லையோ

---

து-பா:—பிரமாணவாக்கியம்:—

यं सम्यङ्नैव जानातिकश्चिन्निरवशेषतः

யம் ஸம்யங்நைவ ஜாநாதிகஶ்சிந்நிரவஶேஷத꞉

சில கண்டார்த்த புஸ்தகங்களிலும் டீகையிலும் 9 - வது மந்திரத்தின் கடைபதங்களாகிய मन्येविदितं மந்யேவிதிதம் என்பவை 10 - வது மந்திரத்தின் ஆரம்பத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மேலும் नाहंमन्ये நாஹம்மந்யே என்பதற்குப்பதிலாக नाहमन्ये நாஹமந்யே அதாவது न अहं अन्ये ந அஹம் அந்யே என்றும் பதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த பாடத்தில் முன் மந்திரத்திற்கு தேவதைகளிடத்திலும் உன்னிடத்திலுமிருக்கிற ரூபம் உன்னால் விசாரிக்கத்தக்கது என்று அர்த்தம் செய்துமுடிக்க வேண்டியது. பிந்திய மந்திரத்திற்கு

अन्ये அந்யே = அஞ்ஞானிகளான இதரர்கள்
(अयं அயம் = இந்தப்பிரம்மா)
(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மத்தை)
सूवेद ஸுவேத = நன்றாய் அறிகிறான்
इति இதி = என்று
(मांवदन्ति மாம்வதந்தி = என்னைக்குறித்துச் சொல்லுகிறார்கள்
अहंतु அஹந்து = நானோ
(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம்)
विदितं விதிதம் = அறியப்பட்டதாக
(इति இதி = என்று)
नमन्ये நமந்யே = நினைக்கவில்லை.॥ 2 ॥

## 11 - வது மந்திரம்.

योन யோந முதலிய வசனத்தால் பிரம்மம் சம்பூரணமாய் சிரவணத்துக்கு விஷயமாக மாட்டாதென்று சொல்லி, இப்போது यस्य யஸ்ய முதலிய வசனத்தால் மனனத்துக்கு விஷயமாகமாட்டாது என்று சொல்லுகிறார்.

यस्य யஸ்ய = எவனுக்கு

ச-பா:—(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்ம ஸ்வரூபம்)
अमतं அமதம் = தெரியமாட்டாது
(इति निश्चयः இதி நிஶ்சயঃ = என்கிற நிச்சயமோ)
तस्य தஸ்ய = அவனுக்கு
(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்ம ஸ்வரூபம்)
मतं மதம் = தெரியும்.
(इति अभिप्रायः இதி அபிப்ராயঃ = என்பது அபிப்பிராயம்)
यस्य யஸ்ய = எவனுக்கு
(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்ம ஸ்வரூபம்)
मतं மதம் = தெரியும்
(इति निश्चयः இதிநிஶ்சயঃ = என்பதாய் நிச்சயமோ)
सः ஸঃ = அவன்
(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மத்தை)
नवेद नவேத = தெரிந்துக்கொள்ளவில்லை.

---

வி-பா:—तस्य தஸ்ய = அவனுக்கு
(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம்)
मतं மதம் = அறியப்பட்டதுதான்.
यस्य யஸ்ய = எவனுக்கு
(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம்)
मतं மதம் = பரிச்சின்னமாக நினைப்பு இருக்கிறதோ
सः ஸঃ = அவன்
नवेद நவேத = அறிகிறதில்லை. பிரம்மத்தைப் பரிச்சின்ன

---

து-பா:—(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம்)
अमतं அமதம் = விசாரிக்கப்படவில்லை அறியப்படவில்லை என்று ஞானமுண்டாயிருக்கிறதோ
तस्य தஸ்ய = அவனுக்கு
(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம்)
मतं மதம் = விசாரிக்கப்பட்டது. அவன் பிரம்மத்தை மனனம் செய்தவன்தான் ஏனெனின் பிரம்மம் அநந்தம் என்கிற ஞானம் அவனுக்கு உண்டாயிருக்கிறது.
यस्य யஸ்ய = எவனுக்கு பிரம்மம் என்னால் விசாரிக்கப்பட்டிருக்கிறது என்கிற
मतं மதம் = புத்தி உண்டாயிருக்கிறதோ
सः ஸঃ = அவன்
नवेद நவேத = அறியவில்லை. ஏனெனின் பிரம்மம் அநந்தம்

ச-பா:-विजानतां விஜாநதாம் = தெரிந்துக்கொண்டவர்களுக்கு

(ब्रह्म ஸ்வரூப = பிரம்மஸ்வரூபம்)

अविज्ञातं அவிஜ்ஞாதம் = அறியப்படாத வஸ்துவாயிருக்கிறது

अविजानतां அவிஜாநதாம் = தெரிந்துக்கொள்ளாதவர்களுக்கு

विज्ञातं விஜ்ஞாதம் = அறியப்படும் வஸ்துவாக இருக்கிறது.

குரு சிஷ்ய சம்வாதத்தைவிட்டு சகல சம்வாத மற்ற வஸ்துவை சுருதியே தன் வசனத்தால் இந்தமந்திரத்தில் முன்சொன்ன அர்த்தத்தையே போதிக்கிறது.

यस्य ...मतं யஸ்ய...மதம்:—எந்த பிரம்மஞானியானவன் பிரம்மஸ்வரூபம் அறியப்படமாட்டாது என்று நினைக்கிறானோ அவன்தான் அதை நன்றாய் அறிந்தவன். मतं...सः மதம்...ஸஃ—எவன் பிரம்மத்தை அறிந்திருப்பதாக நிச்சயிக்கிறானோ அவன்தான் பிரம்மத்தை அறியாதவன். இவ்விரண்டும் வித்வான்களுடையவும் அவி

வி-பா.-மாக நினைக்காதவன் பிரம்மத்தை அறிகிறான், அதை பரிச்சின்னமாக நினைக்கிறவன் அதை அறிந்தவனல்ல என்பது கருத்து.

विजानतां விஜாநதாம் = பிரம்மம் இவ்வளவு என்று பரிச்சேத ஞான முள்ளவர்களுக்கு

अविज्ञातं அவிஜ்ஞாதம் = அறியப்படாததாயிருக்கிறது.

अविजानतां அவிஜாநதாம் = பரிச்சேதத்திற்கு அடங்கினது என்கிற ஞானமில்லாதவர்களுக்கு

विज्ञातं விஜ்ஞாதம் = அது அறியப்பட்டதாக ஆகிறது. என்பது கருத்து.

இவ்விஷயத்தில் பகவான் பாஷ்யகாரராகிய ஸ்ரீ ராமானுஜா

து-பா:-என்று அவன் அறியவில்லை.

பிரம்ம சாக்ஷாத்காரமும் (தர்சனமும்) பூர்ணமாய் உண்டாகிறதில்லை என்று இனி சொல்லுகிறார்.

विजानतां விஜாநதாம் = நாம் பிரம்மத்தைச் செவ்வையாக சாக்ஷாத்கரித்திருக்கிறோம் என்று அறிந்தவர்களுக்கு

अविज्ञातं அவிஜ்ஞாதம் = சாக்ஷாத் கரிக்கப்படவில்லை. ஏனெனின் பிரம்மம் அநந்தம் என்று அறியப்படவில்லை.

अविजानतां அவிஜாநதாம் = நம்மால் பிரம்மம் செவ்வையாக சாக்ஷாத் கரிக்கப்படவில்லை என்று அறிகிறவர்களுக்கு

विज्ञातं விஜ்ஞாதம் = பிரம்மம் சாக்ஷாத்கரிக்கப்பட்டிருக்கிறது. ஏனெனின் பிரம்மம் அநந்தம் என்று அறியப்பட்டிருக்கிறது.

ச-பா:—த்வான்களுடையவும் பக்ஷங்கள் என்று நிச்சயிக்கிறார்.

अविज्ञातं विजानतां அவிஜ்ஞாதம் விஜாநதாம்:—நன்றாய் அறிந்திருக்கும் புருஷனுக்கு பிரம்மம் அஞ்ஞாதமாயிருக்கிறது. இந்திரியம், மனது, புத்தி இவைகளிடத்தில் ஆத்மபுத்தி செய்யும் (அதாவது இவைகளேதான் என்று நினைக்கும்) அஞ்ஞானிக்கு பிரம்மம் அறியப்பட்டதாக இருக்கிறது.

अविजानतां அவிஜாநதாம் = என்பதற்கு கொஞ்சங்கூட புத்தி இல்லாதவர்கள் என்று அர்த்தமல்ல. ஏனெனின் நம்மால் பிரம்மம் அறியப்பட்டிருக்கிறது என்கிற புத்தி இவர்களுக்கு உண்டாகிறதில்லை. இந்திரியம் முதலிய உபாதிகளிடத்தில் ஆத்மபுத்தி யுள்ளவர்களோ வெனில் பிரம்மத்துக்கும் உபாதிகளுக்கும் பேதமிருக்

---

வி-பா:—சாரியர்சொல்லுகிறதாவது:-यतोवाचोनिवर्तन्ते अप्राप्यमनसासह ||तैII-4|| யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ|| தைத் II-4 என்கிற சுருதியில் அநந்தமாயும் அபரிமித குணமுள்ளதாயு மிருக்கிற பிரம்மம் வாக்குனாலும் மனதினாலும் இவ்வளவு என்று சொல்லமுடியாததென்றுசொல்லியிருப்பதால்,பிரம்மம் இவ்வளவு என்று பரிச்சேதஞான முள்ளவர்களுக்கு அது अविज्ञातं अमतं அவிஜ்ஞாதம்அமதம் என்று சொல்லப்படுகிறது. ஏனெனின் பிரம்மம் அபரிச்சின்னமானது. இப்படி அர்த்தம் செய்யாதவளையில் यस्यअमतं तस्य मतं யஸ்ய அமதம் தஸ்யமதம் என்பதிலும் विज्ञातं अविजानतां விஜ்ஞாதம் அவிஜாநதாம் என்பதிலும் விருத்தம் ஏற்படும். ஆனபடியால்

---

து-பா:—இப்படி கண்டார்த்தப்படி அர்த்தம் எழுதப்பட்டது. டீகைப்படி அர்த்தம் என்னவெனில்

यस्य, யஸ்ய = எவனால்

अमतंइतिमतं அமதம் இதி மதம் = செவ்வையாய் அறியப்படவில்லை என்று மனனம் செய்யப்பட்டிருக்கிறதோ

तस्य தஸ்ய = அவனால் பிரம்மம்

मतं மதம் = மனனம் செய்யப்பட்டிருக்கிறது. ஏனெனின் பிரம்மத்தை அபரிச்சின்னமாக அவன் மனனம் செய்திருக்கிறான்.

यस्य யஸ்ய = எவனால்

मतंइतिमतं மதம் இதி மதம் = செவ்வையாய் அறியப்பட்டிருக்கிறதென்று அறியப்பட்டிருக்கின்றதோ

सः नवेद ஸः நவேத = அவன் அறிந்தவனல்ல. ஏனெனின் அவன் பரிச்சின்னஞானியா யிருக்கிறான்.

सः ஸः = அவன்

नवेद நவேத = அதை அறிந்தவனல்ல, ஏனெனின் பிரம்

ச-பா:—கிறதென்று அறியாததாலும், புத்தி முதலிய உபாதிகளை அறிந்திருப்பதாலும் இவர்களுக்கு பிரம்மம் அறியப்பட்டது என்னும் பிராந்தி பொருந்தும். ஆகையால் **विज्ञातं अविजानतां** விஜ்ஞாதம் அவிஜாநதாம் என்பதினால் நன்றாய் அறியாமை பூர்வபக்ஷமாகச் சொல்லப்படுகிறது.

(2) அல்லது **अविज्ञातं** " அவிஜ்ஞாதம் " [99] முதலிய உத்தரார்த்தம் பூர்வார்த்தத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. ॥ 3 ॥

---

வி-பா:—அறியப்படவில்லை என்னும் வசனம் முழுமையும் அறியப்படவில்லை என்னும் அர்த்தத்தைப்போதிக்கிறது. பிரம்மம் சுத்தமாய் ஞானத்திற்கு விஷயமே ஆகாதது என்று நினைக்கக்கூடாது. அப்படி நினைத்தால் **ब्रह्मविदाप्नोतिपरं** ॥ तै II-1 ॥ ப்ரஹ்மவிதாப்நோதி பரம்॥ தை II-1 ॥ (பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மத்தை அடைகிறான்) **तमेवं विदित्वाअतिमृत्यु एति**॥श्वे III-8 ॥ தமேவம்விதித்வா அதிம்ருத்யும் ஏதி ॥ ஶ்வே III-8 ॥ (இவ்விதமாய் அதை அறிந்து சம்சார நிவிர்த்தியை அடைகிறான்) என்கிற வாக்கியங்கள் அசங்கதமாகும். வேதங்களும் அநர்த்தங்களாகப்போகும். ॥ 3 ॥

---

து-பா:—மம் அநந்தம் என்கிற ஞானம் அவனுக் குண்டாகவில்லை.

பிரம்மத்தின் சாக்ஷாத்காரமும் (அதாவது தர்சனமும்) பூர்ணமாக உண்டாகிறதில்லை என்று **अविज्ञातं** அவிஜ்ஞாதம் என்பதினால் சொல்லுகிறார்.

**विजानतां** விஜாநதாம் = நாம் பிரம்மத்தைச் செவ்வையாக சாக்ஷாத்காரம் செய்திருக்கிறோம் என்று அறிகிறவர்களுக்கு, அல்லது நம்மால் பிரம்மம் நன்றாக தியான விஷயமாக்கப்பட்டிருக்கிறதென்று தியானிக்கிறவர்களுக்கு

**अविज्ञातं** அவிஜ்ஞாதம்=பிரம்மம் அறியப்படவில்லை. ஏனெனின் பிரம்மம் அநந்தம் என்கிற ஞானம் அவர்களுக்கு உண்டாகவில்லை.

**अविजानतां** அவிஜாநதாம் =நம்மால் பிரம்மம் செவ்வையாக சாக்ஷாத்கரிக்கப்படவில்லை என்று, அல்லது தியானிக்கப்படவில்லை

---

99. கிளிஞ்சலின்ரூபத்தை அறிந்தவர்களுக்கு அதில் வெள்ளியின் பிராந்தி உண்டாகிறதில்லை. அறியாதவர்களுக்கு பிராந்தி உண்டாகிறது. இது உலகப்பிரசித்தம். இதுபோல் பிரம்மம் ஞானவிஷயம் என்பது பிராந்தி ஞானிகள் இந்த பிராந்தியை அடைகிறதில்லை. ஆனால் பிரம்மம் ஸ்வப்ரகாசமா யிருப்பதால் ஞானவிஷயமன்று என்று அவர்கள் அறிகிறார்கள். பூர்வார்த்தத்தின் அர்த்தத்திற்கு ஹேதுவாய் உத்தரார்த்தம் ஏற்பட்டிருக்கிறது.

ச-பா:–12 प्रतिबोधविदितं मतममृतत्वं हिविन्दते ।
आत्मनाविन्दतेवीर्यं विद्ययाविन्दतेऽमृतं ॥ 4 ॥

12 ப்ரதிபோதவிதிதம் மதமம்ருதத்வம் ஹிவிந்ததே ।
ஆத்மநாவிந்ததேவீர்யம் வித்யயாவிந்ததே ம்ருதம் ॥ 4 ॥

(ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மஸ்வரூபம்)

(यदा யதா = எப்போது)

प्रतिबोधविदितं = बोधंबोधंप्रतिसाक्षित्वेनाविदितं ப்ரதிபோதவிதிதம் = போதம்போதம்ப்ரதிஸாக்ஷித்வேநவிதிதம் = ஒவ்வொரு ஞானம் அல்லது புத்தி விர்த்தியிலும் சாட்சியாக இருப்பதாய் அறியப்படுகின்றதோ

(तदा (ததா = அப்போது)

(तत्|தத் = அது)

मतं மதம் = அறியப்பட்டதாக, நல்லஞானமாக

(भवति பவதி = ஆகிறது)

हि ஹி = ஏனெனில்

(तस्मात् தஸ்மாத் = அதனுல்)

अमृतत्वं அம்ருதத்வம் = மோக்ஷத்தை

विन्दते விந்ததே = (ஒருவன்) அடைகின்முன்

आत्मना ஆத்மநா = ஸ்வரூபத்தால் (தான் தானே)

वीर्यं வீர்யம் = மோக்ஷோபயோகியான பலத்தை

---

து-பா:–என்று நினைக்கிறவர்களுக்கு

विज्ञातं விஜ்ஞாதம் = பிரம்மம் சாக்ஷாத் கரிக்கப்பட்டிருக்கிறது, அல்லது நன்முய் தியானிக்கப்பட்டிருக்கிறது. ஏனெனின் அவர்களுக்கு பிரம்மம் அநந்தம் என்கிற ஞானம் உண்டாயிருக்கிறது. பாஷ்யத்தின் பிரமாணவாக்கியம்:—

सर्वात्मनाविजानामीति तुयस्य मतं भवेत् ।
तस्याज्ञातस्सभगवा न्यो नैवं मन्यते सदा ।
ज्ञातस्तस्य तथास्यैव निश्शेषं मननं कृतं ।
इतियोमन्यते नास्य मतस्सपुरुषोत्तमः ।
नातिवेद्योनचावेद्यस्तस्मात्सपरमेश्वरः ॥

ஸர்வாத்மநா விஜாநாமீதி துயஸ்ய மதம்பவேத் ।
தஸ்யாஜ்ஞாதஸ்ஸபகவாந்யோ நைவம் மந்யதேஸதா ।
ஜ்ஞாதஸ்தஸ்ய ததாஸ்யைவ நிஶ்ஶேஷம் மநநம்க்ருதம் ।
இதியோமந்யதே நாஸ்ய மதஸ்ஸபுருஷோத்தமः ।
நாதிவேத்யோ நசாவேத்யஸ் தஸ்மாத்ஸபரமேஶ்வரः ॥ ॥ 3 ॥

ச-பா:—विन्दते விந்தெ = அடைகிறான்

विद्यया வித்யயா = ஞானத்தால்

अमृतं அம்ருதம் = மோக்ஷத்தை

विन्दते விந்தெ = அடைகின்றான்.

அ - கை:—முந்தின மந்திரத்தில் அறிந்தவர்களுக்கு அது (பிரம்மம்) அறியப்பட்டதல்லவென்று சொல்லப்பட்டது. பிரம்மம் சுத்தமாய் அறியப்படாதபக்ஷத்தில், உலகத்தாருக்கும் பிரம்ம வித்துக்களுக்கும் விசேஷமில்லாமற்போகும், பிரம்மத்தை அறிந்தவர்களுக்கு அது அறியப்படாதது என்பதும் ஒன்றுக்கொன்று விருத்தம். அப்படியானால் அந்தப் பிரம்மம் எப்படி நன்றாய் அறியப்படுமெனின் சொல்லுகிறார்.

प्रतिबोधविदितं=बोधंबोधंप्रतिविदितम् ப்ரதிபோதவிதிதம் =போதம்போதம் ப்ரதிவிதிதம் ஒவ்வொரு போதத்திலும் அதாவது அறிவிலும் அறியப்பட்டது. बोध போத சப்தத்தால் புத்தியால் ஏற்படும் விர்த்தி ஞானங்கள் கூறப்படுகின்றன. எவனுக்கு சகல விர்த்திஞானங்களும் விஷயங்களாகின்றனவோ அவனே ஆத்மா.

---

## 12-வது மந்திரம்.

வி-பா:—प्रतिबोधः ப்ரதிபோதః = நிச்சயமான ஞானம் அதாவது சத்தியத்தன்மை, ஞானத்தன்மை, அநந்தத்தன்மை இவைகளின் ஞானம்.

प्रतिबोधविदितं ப்ரதிபோதவிதிதம் = சத்தியஞான அநந்தத்தன்மை முதலிய அசாதாரணமான தர்மங்களுடன்கூடினதாக அறியப்பட்ட

---

## 12 - வது மந்திரம்.

து-பா:—பிரம்மத்தின் பூர்ணஞான முண்டாகிறதில்லையானால், பிரம்மயோகத்தினால் எது அபோக்ஷிக்கப்படுகிறதோ அது அதாவது மோக்ஷம் எப்படி அடையப்படும் எனின் அவரவர்களது யோக்கியதைக்குத் தக்கபடி பிரம்மத்தின் ஒரு அம்சத்தின் ஞானம் கிடைத்து மோக்ஷம் சித்திக்கும் என்று சொல்லுகிறார். அவரவர்களது யோக்கியதைக்குத் தக்கபடி புருஷர்களால் சிரவணம் செய்யப்பட்ட

मतं மதம் = மனனம் செய்யப்பட்ட பிரம்மம் (மனனம் என்பது உபலக்ஷணம்)

प्रतिबोधविदितं ப்ரதிபோதவிதிதம் = அவரவர்களது யோக்கியதைக்குத் தக்கபடி பிரத்தியக்ஷ தர்சனத்தால் विदितं (चेत्) விதிதம் (சேத்) அறியப்பட்டதானால்

